SRI VIDYA VILASINI SABHA
(STUDENTS ASSOCIATION)
U. V. V. SANSKRIT COLLEGE,
SRIPERUMBUDUR.

ஸ்ரீ :

# ஸ்ரீராமாநுஜன் 46.

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த மாதந்தோறும் வெளிவரும் பத்ரிகை

[மதராஸ் ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் வெளியீடு]

ஆசிரியர் : ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| ஸம் 4 | அக்டோபர்மீ 1952 நந்தனவரு ஐப்பசிமீ | 10 இதழ் |
|---|---|---|

## எம்பெருமானாரும் பகவச்சப்தமும்

ஸ்ரீ பாஷ்யத்தின் உபக்ரமத்தில் ப்ரஹ்மசப்தார்த்த விசாரம் செய்யாநின்ற ஸ்ரீ பாஷ்யகாரர் ஸ்வரூபத்தாலும் குணகணங்களாலும் ஒப்புயர்வற்ற மேன்மைபெற்ற வஸ்துவுக்கே ப்ரஹ்மசப்தவாச்யத்வம் பொருந்துமென்றும், அப்படி மேன்மைபெற்றவன் பரமபுருஷனொருவனேயாகையாலே அவனிடத்தில்தான் ப்ரஹ்மசப்தப்ரயோகம் முக்க்ய வ்ருத்த்யா சேருமென்றும், சுகப்ரஹ்மம் வ்யாஸப்ரஹ்மமென்று சொல்லுவதுண்டாகிலும் அவ்விடங்களில் ப்ரஹ்மசப்தப்ரயோகம் ஔபசாரிகமேயல்லது முக்க்ய வ்ருத்தமன்று என்றும் அருளிச்செய்து, பகவச்சப்தத்திற்கும் இதே நியாயந்தானென்று முடித்திருக்கிறார். இவ்விஷயங்களை உள்ளபடி க்ரஹிக்ககில்லாதவர்கள் ஒரு ஆக்ஷேபம் செய்கிறார்கள். இப்படி யெழுதின பாஷ்யகாரர் ஸ்ரீ பாஷ்யம் தொடங்கும்போதே "பகவத்போதாயநக்ருதாம்" என்று ஸாதித்திருக்கிறார்; போதாயனரென்னும் ஒரு மநுஷ்ய வ்யக்தியை பகவச்சப்தத்தையிட்டு எப்படி குறிக்கலாம்? அன்றியும், ஸ்ரீபாஷ்யத்தின் முடிவில் "இதி ஸ்ரீபகவத்ராமாநுஜவிரசிதே" என்று கூரத்தாழ்வான் ஸாதித்திருப்பதாகச் சொல்லப்படுகிறது. அவர் தம்முடைய திருக்கையால் ஸ்ரீபாஷ்யமெழுதினவராய் இருந்துவைத்து பகவச் சப்தத்தைப்பற்றி ஸ்வாமி ராமாநுஜர் அருளிச்செய்ததற்கு முரணாக "பகவத்ராமாநுஜ" என்று எப்படி பணிக்கிறார்? என்று (ஆக்ஷேபம் செய்கிறார்கள்.)

ஸ்ரீ பாஷ்யத்தில் என்ன சொல்லியிருக்கிறதென்பதை விசதமாகத் தெரிந்துகொள்ளாமல் செய்யும் ஆக்ஷேபமிது. ப்ரஹ்மசப்தத்தையோ பகவச் சப்தத்தையோ பரமபுருஷாத் அந்யத்ர ப்ரயோகிக்கவே கூடாதென்று ஸ்வாமி நிஷேதித்திருக்கவில்லை. அப்படி ப்ரயோகிப்பது அஸாதுவென்று தூஷித்திருக்கவுமில்லை "[illegible] — தஸ்மாதந்யத்ர தத்குணலேச யோகாத் ஔபசாரிக:" என்று ஸ்ரீபாஷ்ய ஸூக்தி ஸுஸ்பஷ்டமாகவுள்ளது. உலகில் முக்க்ய ப்ரயோகமென்றும் ஔபசாரிக ப்ரயோகமென்றும் இருவகையுண்டு. பரமபுருஷனிடத்தில் முக்க்ய ப்ரயோகமென்

றும் இதரர்களிடத்தில் ஔபசாரிக ப்ரயோகமென்றும் வ்யவஸ்தை செய்யப்பட்டிருக்கிறது. ஆக அந்யத்ர ப்ரயோகத்தை நிஷேதிப்பதோ தூஷிப்பதோ செய்யாமையாலே "பகவத் போதாயந" "பகவத்ராமாநுஜ" இத்யாதி ப்ரயோகங்கள் பொருந்தக்குறையில்லை. முக்க்யவ்ருத்தியில்லை, ஔபசாரிகமத்தனை என்று முடிந்தது.

இதற்குமேல் ஒரு விஷயம் விசாரத்திற்கு வருகிறது. ருத்ரனுக்கு மஹாதேவனென்று வ்யபதேசமுள்ளது. மஹாதேவ: என்று ஸமஸ்தபதமாகவே சொன்னால்தான் ருத்ரப்ரதீதி வருமென்றும், மஹாந் தேவ:—மஹாந்தம் தேவம்—மஹதே தேவாய—மஹதி தேவே என்றிப்படி வ்யஸ்தமாகச் சொன்னால் ருத்ரப்ரதீதி வரமாட்டாதென்றும் பூருவர்கள் நிஷ்கர்ஷித்திருக்கிறார்கள். இவ்விடத்திலும் ப்ரஹ்மசப்த பகவச்சப்தங்களிற்போலே முக்க்யவ்ருத்தி, கௌணவ்ருத்தியென்று கொண்டு, மஹாதேவ: என்று ஸமஸ்தமாகச் சொல்லுமிடங்களில் ருத்ரப்ரதீதியானது முக்க்யவ்ருத்த்யா வரும், மஹாந்தேவ:, மஹதி தேவே என்றாற்போலே வ்யஸ்தமாகச் சொல்லுமிடங்களில் அது கௌணவ்ருத்த்யாவரும் என்று வ்யவஸ்தை பண்ணக்குறையில்லை—என்று சிலர் சொல்லப்பார்க்கிறார்கள்.

இது பொருத்தமற்றது. மஹாதேவபதமும் மஹாவ்ருக்ஷபதமும் ஸமதுலையில் வைக்கப்பட்டிருக்கிறது. கள்ளிச் செடிக்கு மஹாவ்ருக்ஷமென்று பெயர். மஹாவ்ருக்ஷமென்று ஸமஸ்தமாகச் சொன்னால்தான் கள்ளிச்செடிக்கு ப்ரதீதி வரும். மஹாந் வ்ருக்ஷ: என்று வ்யஸ்தமாகச் சொன்னால், உண்மையில் பெரிதாயிருக்கின்ற மரம் எதுவோ அதற்கு ப்ரதீதி வருமேயொழிய கள்ளிச் செடிக்கு ஒருநாளும் ப்ரதீதி வரமாட்டாது. மஹாதேவ ...த்திலுமிப்படியேதான். இங்கு முக்க்யவ்ருத்தி கௌணவ்ருத்தி என்கிற வார்த்தைக்கு அவகாசமே கிடையாது.

மஹாதேவபதம் ஸமஸ்தமாயிருந்தால்தான் ருத்ரப்ரதீதிவரும் என்று சொல்லுவது பிசகு; ஸமஸ்தமாயிருந்தாலும் வ்யஸ்தமாயிருந்தாலும் ருத்ரப்ரதீதியுண்டாகத் தடையில்லை—என்னில்; இதற்கு நாம் ஒரு மறுப்பும் சொல்லவருகின்றிலோம். ஸமஸ்தபதம் வ்யஸ்தபதம் என்கிறவிஷயமே இல்லையென்று தேறிவிட்டால் இங்கு விவாதப்ரஸக்தியே கிடையாதன்றோ. முக்க்யவ்ருத்தி, கௌணவ்ருத்தி என்கிற பேச்சுக்கும் அவகாசமில்லையன்றோ.

இனி, ஸமஸ்தபதமாயிருந்தால்தான் ருத்ரப்ரதீதிவரும், வ்யஸ்தமாயிருந்தால் அது வாராதுதான் என்கிற நியமத்தை மாற்றாமல் ஒப்புக்கொண்டு, ப்ரகரணபலாத் சிலவிடங்களில் வ்யஸ்தப்ரயோகத்திலும் ருத்ரப்ரதீதிவரலாமென்று வாதம் வரின், இது ஏற்கத்தக்கதன்று. ப்ரகரணபலாத் அந்த சக்திக்கு ப்ரச்யுதிவருவதாகச் சொல்லுவதானது சாஸ்த்ரஜ்ஞர்கள் ஆமோதிக்கத் தக்கதன்று. 'பங்கஜம் ராத்ரௌ விகஸதிஸ்ம' என்று ஒருவன் ப்ரயோகம்செய்து, இந்த பங்கஜபதத்திற்குத் தாமரை மலர் பொருளானாலும் ராத்ரியில் விகஸித்ததாகச் சொல்லுகிற ப்ரகரண பலத்தாலே குமுதந்தான் இங்குப் பொருளாக விவக்ஷிதம் என்று சொன்னால் இதையும் ஆமோதிக்க நேரும். ப்ரகரணபலாத் அர்த்தவிசேஷபோதம் என்பது ரூடிஸ்தலத்திலன்று; நாநார்த்தக ஸ்தலத்தில். போஜநப்ரகரணத்தில் 'ஸைந்தவமாநய' என்றால் உப்பு கொண்டுவா என்று பொருள்; அந்த வாக்யத்தையே ப்ரயாண ப்ரகரணத்தில் சொன்னால் குதிரை கொண்டுவா என்று பொருள் என்பதாகத் தெரிவிப்பர் சாஸ்த்ரஜ்ஞர். ஆக, ப்ரகரணபலாத் அர்த்தவிசேஷ ப்ரதீதியென்று சொல்ல நினைக்குமிடங்களில் ரூடிவாதம் அநுபபந்நம் என்று முடிந்தது.

1. வ்யஸ்தப்ரயோகத்தில் ரூடிசக்தியினால் எப்போதுமே ருத்ரபோதம் வரமாட்டாது.

2. வேறு வகையாலே சிலவிடங்களில் அது வரக்கூடும்; சிலவிடங்களில் வராமலும் போகும். அதற்கு ப்ரகரணம் நியாமகம்.

என்று சிலர் நிஷ்கர்ஷிப்பதாகத் தெரிவிப்பதானது பண்டிதகோஷ்டிகளில் சிறிதும் பரிசு பெறாது. 'ரூடி சக்த்யா' என்பதும் 'ப்ரகரணபலாத்' என்பதும் பரஸ்பரவ்யாஹதங்கள். ஸாமாந்ய சப்தங்கள் ப்ரகரண பலாத் விசேஷோபஸ்தாபக மாவதுண்டு. நாநார்த்தக சப்தங்களுமப்படியே. ப்ரஹ்மசப்தமோ பகவச் சப்தமோ மஹாதேவசப்தமோ ஸாமாந்ய சப்தமுமன்று, நாநார்த்தக சப்தமுமன்று. ப்ரஹ்மசப்த பகவச்சப்தங்கள் நாராயண சப்தாபேக்ஷயா ஸாமாந்ய சப்தந்தானேயென்று ஒரு சோத்ய முண்டாகலாம். அது வேதாந்த ஸிந்துவில் ஒரு ஆழ்ந்த விஷயம். பகவாந் ஸேவித:, ப்ரஹ்ம ஸேவிதம் என்றால் 'போதாயந பகவாந் ஸேவிதோ வா? சுகப்ரஹ்ம ஸேவிதம் வா?' என்று ஒருவர்க்கும் விசிகித்ஸை யுண்டாகாது. ஆகவே ப்ரஹ்மசப்த பகவச் சப்தங்களுக்கு பரப்ரஹ்மந்தவிர வேறிடங்களில் ஔபசாரிக ப்ரயோகமிருப்பதுபோல் மஹாந்தேவ: என்பதற்கும்—என்று நெஞ்சால் நினைக்கவும் தகாது. விரிவு பின். .... .... ... *

---

# விபீஷண சரணாகதி

ஸ்ரீராமாயணத்தில் விபீஷண சரணாகதி யென்பது ஒரு சிறந்த ப்ரகரணம். விபீஷணன் ராவணனுக்குப் பலவாறு நன்மைகளை உபதேசித்தும் அவன் கேளாமல் திரஸ்கரித்ததனால் நான்கு அன்பர்களோடுகூட ஆகாயத்திற் கிளம்பி ஸ்ரீராமபிரான் வாநர முதலிகளோடுகூட எழுந்தருளியிருக்குமிடத்திற்கு நேராக வந்து வானரவீரர்களை நோக்கி 'அடியேனை நீங்கள் இராமபிரானது திருவடிகளுக்கு ஆளாக்கவேணும்' என்று பிரார்த்திக்கையில் அந்த வானர வீரர்கள் அவனிடத்தில் மிக்க அதிசங்கை கொண்டு, ராமகோஷ்டிக்கு அவனால் மஹத்தான அபாயம் விளையுமென்றெண்ணி அவனைச் சேர்த்துக் கொள்ளவே கூடாதென்று இராமபிரானிடத்தில் பிரபலமாக ஆக்ஷேபங்கள் செய்ததாகவும், சற்றுப்போது விசாரம் நடந்து, விபீஷணனைச் சேர்த்துக்கொள்ளவே போகிறேன் என்று இராமபிரான் திருவாய் மலர்ந்தருளி அப்படியே அவனைச் சேர்த்துக் கொண்டதாகவும் வரலாறு.

இவ்விதிஹாஸத்தில் நாம் உய்த்துணரவேண்டிய நுட்பங்கள் பலவுண்டு. இரண்டொன்றை இப்போது எடுத்துக் காட்டுதும்.

விபீஷணாழ்வான் வந்து புகும்போது "நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷணமுபஸ்திதம், ஸர்வலோக சரண்யாய ராகவாய மஹாத்மநே." என்று வானர முதலிகளை நோக்கி முறையிடுகின்றான். பெருமாளை ஸர்வலோக சரண்யரென்று விபீஷணன் ஸந்தேஹ லேசமுமின்றித் தெரிந்து கொண்டிருக்கிறான். இன்னார் இனையாரென்கிற வாசியின்றிக்கே எப்படிப்பட்டவர்களையும் ரக்ஷயராகத் திருவுள்ளம் பற்றிக் காத்தருள்பவர் பெருமாள் என்னுமிடத்தை நன்றாகத் தெரிந்து கொண்டேயன்றோ விபீஷணன் 'ஸர்லோக சரண்யாய' என்று ஓலமிடுகிறான். பெருமானுடைய உண்மையான ஸ்வபாவத்தை இங்ஙனே தெரிந்து கொண்

டிருக்கும்போது விபீஷணன் நேர்கொடு நேரே பெருமாள் திருவடிவாரத்திலே வந்து விழுந்திருக்கலாமே. அப்போது எவ்விதமான ஆக்ஷேப ஸமாதானங்களுக்கும் இடமிராதே. வானர வீரர்கள் பராக்ரமம் காட்டிப் பரிபவித்தவை யொன்றும் அவகாசம் பெற்றிராதே. பெருமாள் கட்டுங் காவலுமாக இருக்கிறாரல்லரே. "உத்பபாத கதாபாணி:" என்று உயரக் கிளம்பின விபீஷணன் நேராக ஸ்ரீராம பாதாரவிந்தங்களிலே வந்து விழுந்து 'அந்தோவடியேற்கு அருளாயுன்னருளே' என்றால் விபீஷணனுடைய அபேக்ஷிதம் மிக எளிதாகத் தலைக்கட்டி யிராதோ? வானர வீரர்களை வேண்டுவானேன்? அவர்கள் தடியும் தாப்பு மெடுத்துத் தகர்க்கப் புகுவானேன்? ஒருவிதமான கஷ்டத்திற்கும் அவகாசமில்லாதபடி விபீஷணன் நேராக ஸ்ரீராம பாதங்களில் வந்து விழுந்து உய்ந்திருக்கலாமே; என் அங்ஙனம் செய்யவில்லை? என்று ஆராய வேண்டுவது அவசியமல்லவா?

ஆராயுமளவில் தேறும்பொருள் என்னென்னில்; கேண்மின். நேராகப் பெருமாள் திருவடிகளிலே புகுவது முறைமையன்று; "வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து" என்கிறார் ஆழ்வார். பாகவதர்களை முன்னிட்டுக் கொண்டே பகவான் திருவடிகளிற் புகவேணும். யானைப்பாகனை முன்னிட்டுக்கொண்டல்லது யானையினருகிற் செல்லவொண்ணாது. "தென்னானாய் வடவானாய் குடபாலானாய் குணபாலமதயானாய்!" என்று பெரிய மதயானையாகக் கூறப்படுகிற பகவானிடத்தே பாகவதர்களாகிற பாகனை முன்னிட்டே புகவேணும். இது சிறந்த சாஸ்த்ரார்த்தம். இதனை அநுஷ்டித்துக் காட்டினன் விபீஷணாழ்வான். ஆனது பற்றியே ஆழ்வானென்ற பட்டமும் பெற்றான்.

இங்ஙனே முறை தப்பாமே வந்து புகுந்த விபீஷணன்மீது வானர வீரர்கள் த்ரோஹ புத்திகொண்டது ஏன்? பரம ஸாத்விகனான விபீஷணனென்பானொருவன் இலங்கையிலுளன் என்பது ஸுக்ரீவ மஹாராஜர்க்குத் தெரியாதா? விபீஷணன் ஸாத்விகனன்றிக்கே அயோக்கியனாகவே யிருக்கவுமாம். இருந்தாலென்ன? அவன் ஒரு நால்வருடன் வந்து புகுந்ததனால் ராமகோஷ்டிக்கு என்ன அவத்யம் விளைந்திடும்! பெருமாளுடைய வீரம் அறியாதவனோ ஸுக்ரீவன். *பிசாசாந் தாநவாந் யக்ஷாந் ப்ருதிவ்யாஞ்சைவ ராக்ஷஸாந். அங்குள்யக்ரேண தாந் ஹந்யாம் இச்சந் ஹரிகணேச்வர!" என்று பெருமாள் புதிதாக எடுத்துரைக்க வேண்டும்படியோ ஸுக்ரீவனுடைய அறிவிருப்பது. மராமரமேழ் செற்றவன்றே அறிந்திலனோ? அறிந்திருந்தும் எதற்காக அஞ்சி விபீஷணன் மீது படையெடுக்கப் புகுந்தது? என்று ஆராய வேண்டாவா?

ஆராயுமளவில் தேறும் பொருள் இது காண்மின். இதனை நம் வாயால் வெளியிடுவதிற் காட்டிலும் கவிசக்ரவர்த்தியான கம்பர் வாக்கினால் வெளியிடுவது மிக நன்று என நினைக்கிறோம்.

விபீஷண பரிக்ரஹத்தைப் பற்றின ஆக்ஷேப ஸமாதானங்களெல்லாம் முடிந்த பின்பு பெருமாள் ஸுக்ரீவனுக்குக் கட்டளை யிடுவதைக் கம்பர் கூறுகின்றார்;—

"ஆதலான் அபயமென்ற பொழுதத்தே அபயதானம்
ஈதலே கடப்பாடென்பது, இயம்பினீரென்பால் வைத்த
காதலான், இனிவேறெண்ணக் கடவதேன்? கதிரோன் மைந்த!
கோதிலாதவனை நீயே என்வயிற் கொணர்தி யென்றான்"

என்பதாம் அந்தச் செய்யுள்.

இது தன்னில், "இயம்பினீர் என்பால் வைத்த காதலான் இனி வேறெண்ணக் கடவதேன்?" என்பது ஸாரமாக நோக்கத்தக்கது. "ஸுக்ரீவா! நீயும் உன்னைச் சேர்ந்தவர்களும் இந்த விபீஷணனை அங்கீகரிக்கலாகாதென்று வலிதாக மறுத்ததற்குக் காரணம் நான் அறியேனோ? விபீஷணனிடத்தில் தோஷமிருப்பதாக உண்மையில் நினைத்து நீங்கள் மறுத்தவர்களல்லீர்; என்னிடத்தில் நீங்கள் வைத்திருக்கின்ற காதலுண்டே, அது எல்லை கடந்தது. அஸ்தாநே அபாய சங்கை பண்ணுவதற்குக் காரணமான அந்தக் காதலின் மிகுதியினால் மருண்டு மறுத்தீர்களத்தனை. இத்தகைய பரமப்ரேமம் நீங்கள் என்பால் கொண்டிருப்பது பற்றிச் சாலவும் உவக்கின்றேன்" என்று விரிவுபட இராகவன் திருவாய் மலர்ந்தருளியதைக் கம்பர் ஸூத்ரம் போல் அமைத்திருக்கின்ற அழகு என்னே!

பகவானிடத்திலே கொண்ட காதல் பாகவத சிகாமணிகளிடத்தே அதிசங்கையை விளைக்குமோ? என்று கேட்கவேண்டா. பரதாழ்வான் பரம பக்தி தலையெடுத்துப் பெருமாளைத் திருப்பி யெழுந்தருளப் பண்ணிக்கொண்டு போகச் சித்திரகூடம் நோக்கிப் பரிவாரங்களுடனே வரும்போது குஹப்பெருமாளிடத்தில் நடந்த செய்திகளை நன்கு அறிவீர்களே; அயோத்யா காண்டத்தில் குஹப்பெருமாள் இராமபிரானுடைய சக்தி விசேஷங்களையும் நன்கறிந்தவர்; பரதாழ்வானுடைய பக்தியின் கனத்தையும் நன்கறிந்தவர். அப்படியிருந்தும், நல்லப்ரதிபத்தியோடே வந்துகொண்டிருந்த அப்பரதாழ்வானை நோக்கி விபரீதமாகச் சங்கித்து,

"அஞ்சனவண்ண னென்னுருயிர் நாயகனாளாமே
வஞ்சனையாலர செய்திய மைந்தரும் வந்தாரே
செஞ்சரமென்பன தீயுமிழ்கின்றன செல்லாவோ
உஞ்சிவர் போய்விடின் நாய்க்குகனென்றெனை யோதாரோ.

ஆழநெடுந்திரை யாறு கடந்திவர் போவாரோ
வேழ நெடும்படைகண்டு விலங்கிடும் வில்லாளோ
தோழமை யென்றவர் சொல்லிய சொல்லொரு சொல்லன்றோ
ஏழமை வேடனிறந்திலனென்றெனை யேசாரோ." (கம்பர்)

என்கிறபடியே அதிப்ரவ்ருத்திகள் செய்யப் பார்த்தது எதனாலே? பெருமாள் மீது கொண்ட காதலின் மிகுதியாலன்றோ.

உள்ளத்தை உள்ளபடி உணரவல்ல யோகிகளில் தலைவரான பரத்வாஜ மாமுனிவரும் பரதனைப் பார்த்து *கச்சிந்ந துஷ்டோ வ்ரஜஸி ராமஸ்யாக்லிஷ்ட கர்மண:" [பரதா! உன்னைப் பார்த்தால் எனக்கு மிகவும் அதிசங்கை உண்டாகிறதே; இராமனுக்கு ஏதோ தீங்கிழைக்கப்போகிறாய் போலே தோன்ற நின்றாயே; அந்தோ! இராமன் ஒருவர்க்கும் ஒரு தீங்கும் இழைப்பவனல்லனே; அன்னவன்திறத்து நீ தீங்கிழைக்க நினைக்கவும் தகாதே; ருஜுவான புத்தியுடன் செல்லுகின்றாயா?] என்று கேட்டிருக்கின்றார். ஒரு யோகிச்ரேஷ்டர் இப்படி அஸ்தாநே கலங்கினாரென்றால் காதலின் கனமே யன்றோ இதற்குக் காரணமாக வடுக்கும்.

அயர்வறு மமரர்களென்று போற்றப்பட்ட நித்ய ஸூரிகளுக்கும் இங்ஙனே அஸ்தாநே அபாய சங்கையுண்டு. "ஹாவு ஹாவு ஹாவு' என்கிற ஸாமகான கோஷத்தைக் கேட்கும் திருவனந்தாழ்வான் அந்த ஸாமகோஷத்தை அஸுர ராக்ஷஸர்களின் கோலாஹலமென்று மருண்டு மயங்கிச் சீறி அழலை உமிழ்கின்றானென்று திருமழிசைப் பிரான் தமது உட்கண்ணினாற் கண்டு பேசுகின்றார்;—" ஆங்கு ஆரவாரம் அது கேட்டு அழலுமிழும் பூங்

ஸ்ரீ ரா. 46—2.

காரரவு'' என்பது அவ்வாழ்வாருடைய பாசுரம். பட்டரும் ஸ்ரீ குணரத்ந கோசத்தில்—"ஸ்நேஹாத் அஸ்தாநரக்ஷா வ்யஸநிபிரபயம் சார்ங்க சக்ராஸி முக்க்யை: ஆநந்தைகார்ணவம் ஸ்ரீ:! பகவதி! யுவயோராஹுராஸ்தாநரத்நம்'' என்கிறார். பரமபதத்தில் பஞ்சாயுதாழ்வார்களும் ப்ரேமத்தாலே கலங்கிக் காப்பிடா நிற்பர்களென்கிறது இதில்.

ஆகவே விபீஷணாழ்வான் திறத்து ஸுக்ரீவ மஹாராஜப்ரப்ருதிகள் கலங்கினது கூடும். அது ப்ரேமத்தின் மிகுதியாலத்தனை என்கிற நுட்பம் இங்கு அறியக் கிடக்கின்றது.

வானர வீரர்கள் எவ்வளவு தான் ஆக்ஷேபித்தாலென்ன? அதை இராமபிரான் பொருள் படுத்த வேணுமோ? அவர்களுடைய ஆக்ஷேப மொழிகளைச் செவியேற்காமலே 'வாராய்! விபீஷணா!' என்று சடக்கென அழைத்துக் கொள்ளலாகாதா? 'அங்கதனே நீ என்ன சொல்லுகிறாய்? சரபனே! நீ என்ன கூறுகின்றாய்? ஜாம்பவானே! நீ என்ன இயம்புகின்றாய்?' என்றிப்படி ஒவ்வொரு குரங்கையும் கேட்டுக்கொண்டு கிடக்கவேணுமோ? அந்தக் காலதாமதம் விபீஷணனுக்குப் புண்ணிற் புளிப்பெய்தாலொக்குமே; பெருமாள் திருவாக்கிலிருந்து என்ன கட்டளை வெளிவரப் புகுகின்றதோ! என்று அவன் குடல் குழம்பி நிற்கும்படியாக வொரு காலக்ஷேபம் செய்தது என்? என்று ஆராய வேண்டும்.

எம்பெருமான் ஆச்ரித பாரதந்த்ரியமே வடிவெடுத்தவனாகையாலே எதையும் ஸ்வதந்திரனாகச் செய்ய விரும்பாமல் அடியார்களோடு ஒரு மிடறாகக் கலந்து செய்வதே கடமையென்று விரதங் கொண்டவனாதலால், அத்தகைய தனது விரதத்தையும் வழுவாது காட்டுதல் இங்கு அறியத்தக்க சாஸ்த்ரார்த்தம். அங்ஙனே அடியவர்களோடு கூடிக் கலந்து பெருமாள் ஒரு நிர்த்தாரணம் வெளியிடும்போது மிகவும் அற்புதமானவொரு சாஸ்த்ரார்த்தத்தை வெளியிட்டிருக்கின்றார். அஃது என்னென்னில்;—

விபீஷணன் துஷ்டனாகையால் அவன் அங்கீகரிக்கத் தக்கவனல்லன்—என்றார்கள் ஸுக்ரீவாதிகள். விபீஷணன் துஷ்டனல்லனாகையாலே அங்கீகரிக்கத் தகுந்தவனே என்றார் திருவடி. ஆக இங்ஙனே விளைந்த இரண்டு பக்ஷங்களையும் கண்டித்தார் பெருமாள்.

இரண்டு பக்ஷங்களையும் எங்ஙனே கண்டித்தாராக முடியும்? திருவடியின் பக்ஷத்தைத் தழுவியே யன்றோ விபீஷணனை அங்கீகரித்திருக்கின்றார் என்று கேள்வி பிறக்கும். விஷயம் அதுவன்று. இவனை அங்கீகரிக்கலாகாதென்று ஸுக்ரீவாதிகள் கூறியதைக் கண்டித்தது நிர்விவாதம். திருவடியின் கூற்றுவது— இவன் 'அதுஷ்டனாகையாலே' என்கிற காரணோக்தியானது பெருமாள் திருவுள்ளத்திற்கு இசையாதது. "தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத் அகர்ஹிதம்'' என்கிற பெருமாள் திருவாக்கானது திருவடியின் பக்ஷத்திற்கு [ஏகதேசத்திற்கு]க் கண்டனமாக நிற்கின்றது. குற்றவாளரை அங்கீகரிப்பதே நலம் என்கிற பெருமாள் திருவுள்ளம் வெளியாயிற்று. இங்ஙனே பல சாஸ்த்ரார்த்தங்கள் பொதிந்து நிற்குமிடம் விபீஷண சரணாகதி ப்ரகரணம். ... ... (*)

---

# கண்ணனும் ராதையும்

பத்மே த்வங்நயநே ஸ்மராமி ஸததம் பாவோ பவத்குந்தலே,
நீலே முஹ்யதி கிம் கரோமி மஹிதை: க்ரீதோஸ்மி தே விப்ரமை:,
இத்யுத்ஸ்வப்நவசோ நிசம்ய ஸருஷா நிர்பர்த்ஸிதோ ராதயா
க்ருஷ்ணஸ் தத்பரமேவ தத் வ்யபதிசந் க்ரீடாவிட: பாது வ:.

கண்ணபிரான் ராதையென்கிற கோபியோடு சயனித்துக்கிடக்கும்போது வாய் வெருவுகின்றான்; பெருமாள் திருமொழியில் * கருமலர்க்கூந்த லொருத்திதன்னைக் கடைக் கணித்தாங்கே யொருத்தி தன்பால் மருவி மனம்வைத்து மற்றொருத்திக் குரைத்து ஒரு பேதைக்குப் பொய் குறித்துப் புரிகுழல் மங்கை யொருத்திதன்னைப் புணர்தி அவளுக்கும் மெய்யனல்லை * என்றருளிச்செய்த க்ரமத்திலே கண்ணனுடைய மனம் எங்கும் புக்குத்திரியு மாதலால், ராதை அருகிலிருப்பதை மறந்து மூன்று காதலிகளைப் பற்றி வாய் வெருவினன்;

பத்மே த்வந்நயநே ஸ்மராமி ஸததம்—பத்மா என்று ஒரு காதலியின் பெயர்; அவளைப் பத்மே! என்று ஸம்போதித்து உன் கண்ணழகை மறக்க முடியாமல் ஸதா அதனையே சிந்தித்துக் கொண்டிருக்கிறேன் என்றான்.

பாவோ பவத்குந்தலே நீலே! முஹ்யதி—நீலா என்று மற்றொரு காதலியின் பெயர்; அவளை நீலே! என்று ஸம்போதித்து எனது கருத்தெல்லாம் உனது கூந்தலிலேயே மயங்கிக் கிடக்கிறது என்றான்.

மஹி! தே தை: விப்ரமை: க்ரீதோஸ்மி, கிம்கரோமி—மஹீ என்று ஒரு காதலிக்குப் பெயர்; அவளை மஹி! என்று ஸம்போதித்து உன்னுடைய அப்படிப்பட்ட விலாஸங்களுக்கு நான் தோற்றிருக்கிறேன், என்ன பண்ணுவேன்? என்றான். எம்பெருமானுக்கு ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவிகள் மூவரும் ப்ரதான திவ்ய மஹிஷிகளாதலால் பத்மே! என்று ஸ்ரீதேவியையும் மஹி! என்று பூதேவியையும், நீலே! என்று நீளா தேவியையும் விளித்து வாய் வெருவினது ஒக்கும்.

அருகிலிருந்த ராதையானவள் இதைக் கேட்டவாறே சீறத் தொடங்கினள். 'நான் பக்கத்திலிருக்க இப்படி மனஸா வாசா வ்யபிசரிப்பதுமுண்டா வென்று க்ஷேபித்தாள். அப்போது கண்ணபிரான் வெகு சாதுரியமாய் அவளை ஸமாதானப் படுத்தினன்; உன்னையல்லது வேறொரு வ்யக்தியை நான் கனவிலு மறியேனே; நான் இப்போது சொன்னதெல்லாம் உன்னைப்பற்றியே காண் என்று ஸமர்த்தனம் செய்துவிட்டான். அது எங்ஙனே யென்னில்;

பத்மே என்றதும், நீலே என்றதும், மஹி என்றதும் ஸம்போதனமாக முன்பு நின்றன. இப்போது அப்படியில்லை. ராதை அருகிலிருப்பவளாதலால் அவளை நோக்கியே எல்லாம் சொல்லுகிறபடி. ராதே என்கிற ஸம்போதனம் மாநஸமாகக் கடவது. என் காதலீ! [த்வந்நயநே பத்மே ஸ்மராமி] உன் கண்களைத் தாமரை மலர்களாகவே எண்ணுகிறேன். (பத்மம், பத்மே, பத்மாநி.)

[பாவ: நீலே பவத்குந்தலே முஹ்யதி.] கருநிறத்ததான உனது கூந்தலிலேயே என் சிந்தனை. (நீலே, நீலயோ:, நீலேஷு.)

[மஹிதை: தே விப்ரமை: க்ரீதோஸ்மி.] முன்பு மஹி, தை:- என்று இரண்டு பதமாகக் கொள்ளப்பட்டது. இப்போது ஒரே பதமாகக் கொள்க. மஹிதமென்றால் சிறந்ததென்கை. சிறந்தவையான உனது விலாஸங்களாலே நான் விலைக்கு வாங்கப்பட்டேன் என்று எல்லாம் ராதையையே நோக்கிச் சொன்னதாக ஸமர்த்தித்தானாயிற்று. இது ஒரு சாதுர்யமான உக்தி விந்யாஸம். .... ... ... (*)

# நர்மதாஸமுத்ர ஸம்வாதம்.

காளிந்தி ப்ருஹி, கும்போத்பவ, ஜலதிரஹம் நாம க்ருஹ்ணஸி கஸ்மாத்
சத்ரோர் மே, நர்மதாஹம் த்வமபி வதஸி மே நாம கஸ்மாத் ஸபத்ந்யா:,
மாலிந்யம் தர்ஹி கஸ்மா தநுபவஸி? மிலத்கஜ்ஜலைர் மாலவீநாம்
நேத்ராம்போபி:, கிமாஸாம் ஸமஜநி, குபித: குந்தலக்ஷோணிபால:.

குந்தலதேசத்து அரசனுக்கும் மாலவதேசத்து அரசனுக்கும் போர்நடந்து அதில் மாலவதேசத்து அரசன் தனது ஸேனைகளோடுங்கூடத் தோல்வியடைந்து மாண்டொழிந்தானென்கிற வரலாற்றை ஒரு மஹாகவி நேர்முகமாகச் சொல்லாமல் வெகு சமத்காரமாகத் தெரிவிக்கிறார். இந்த உக்தி சமத்காரம் ரஸித்து அநுபவிக்கத்தக்கது.

நர்மதாநதியானது மாலவதேச ப்ராந்தத்தில் ப்ரவஹிக்கின்றது. இந்த நதியானது ஸமுத்ரத்தில் போய்ச்சேர்ந்ததாம். அப்போது ஸமுத்ரராஜனுக்கும் இந்த நதிக்கும் ஒரு ஸம்பாஷணை நடந்ததாக வைத்து அதன்மூலமாக குந்தலதேசத்து ராஜாவின் வெற்றியும் மாலவதேசத்து ராஜாவின் தோல்வியும் தெரிவிக்கப்படுகின்ற அ கு ரஸிகர்கள் அநுபவிக்கத் தக்கது.

தன்னிடம் வந்து சேர்கின்ற நர்மதாநதியை நோக்கி ஸமுத்ரராஜன் காளிந்தி! ப்ருஹி என்றான்,. அதாவது, யமுநாநதியே! என்ன ஸமாசாரம்? சொல்லு என்று வினவினான். நர்மதா நதியே! என்று விளிக்கவேண்டியிருக்க, அங்ஙனம் விளியாமல் யமுநாநதியே! என்று விளித்ததனால் நர்மதாநதிக்குக் கோபமுண்டாகி அதனால் ஸமுத்ரராஜனை நோக்கி ஹே ஸமுத்ர ராஜா! என்று விளியாமல் அகஸ்த்யரே! என்று விளித்து, என்ன சமாசாரம்? சொல்லும் என்ற தாம் நர்மதா நதி. [ப்ருஹி என்பதை கும்போத்பவ என்ற விளியோடும் கூட்டுக.]

கடலரசனை நோக்கி அகஸ்தியரே! என்று விளிக்கவே அவன் சீறி [ஜலதி: அஹம் மே சத்ரோ: நாம கஸ்மாத் க்ருஹ்ணஸி?] என்றானாம். யமுநாநதியே! நான் ஸமுத்ரராஜனல்லவா? உனக்குத் தெரியவில்லையா? அப்படியிருக்க, ஒருகால் என்னைக் குடித்ததனால் எனக்குப் பகைவரான அகஸ்தியருடைய பெயரால் என்னை ஏன் விளிக்கின்றாய்? என்றான்.

அதற்கு பதிலாக யமுனைகேட்டது; [அஹம் நர்மதா, மே ஸபத்ந்யா: நாம த்வமபி கஸ்மாத் வதஸி?] நான் நர்மதையல்லவா? அப்படியிருக்க எனக்குச் சக்களத்தியான யமுனையின் பெயரையிட்டு என்னை ஏன் விளித்தாய்?

அதன்மேல் கடல் கேட்டது [மாலிந்யம் தர்ஹி கஸ்மாதநுபவஸி?] நீ நர்மதையாகில் வெளுத்திருக்கவேணுமே; அப்படியில்லையே, கறுத்திருக்கின்றாயே; எதனால் இந்தக் கறுப்பு உண்டாயிற்று?

அதற்கு நருமதையின் பதில் [மிளத் கஜ்ஜலை: மாலவீநாம் நேத்ராம்போபி:] மாலவதேசத்து மாதர்கள் அழுதுகொண்டே என்னிடத்தில் ஸ்நானம் பண்ணினார்கள்; அப்போது அவர்களுடைய கண்ணிலிருந்த மையோடு கூடிய கண்ணீர் வெள்ளம் பெருகிற்று. அதனால் எனக்குக் கறுப்பு ஏறிற்று.

அதன்மேல் கடலரசன் கேட்டான் [ஆஸாம் கிம் ஸமஜநி?] ஸ்த்ரீகள் நீராடும்போது (கண்)மையை அவித்துக்கொண்டு அழுவது வைதவ்யம் நேருகின்ற நாளிலேயாதலால் அந்த மாலவதேசத்து மாதர்களுக்கு வைதவ்யம் நேர்ந்திருக்கக் கூடுமென்றெண்ணிய கடலரசன் அதை வ்யக்தமாகத் தெரிந்துகொள்ள விரும்பி 'அந்த ஸ்த்ரீகளுக்கு என்ன நேர்ந்து விட்டது? என்றான்.

அதற்கு நர்மதையின் பதில். [குபித: குந்தல க்ஷோணிபால:] குந்தள தேசத்து ராஜா சீற்றங்கொண்டார் என்றாள், சீற்றத்தினால் மாளவதேசத்து அரசனையும் அவனது பரிகரங்களையும் கொன்றிட்டதனால் மாளவநாட்டு மாதர்கள் ஸௌமங்கல்யமிழந்து மையை *அவித்து அழுதுகொண்டே நீராட நேர்ந்தது; அதனால் நான் கறுப்பு ஏறப்பெற்றேன் என்றபடி.

குந்தள நாட்டரசனுடைய வெற்றியை இங்ஙனே வெகு சமத்காரமாகத் தெரிவித்தது மன்றியில் அவ்வரசனால் கொல்லப்பட்ட வீரர்கள் பலகோடி தாறாயிரக் கணக்கானவர்கள் என்பதும் இதில் த்வநி முறையில் காட்டப்பட்டது. ஒரு பெரிய நதியானது தன் நிறம் மாறிக் கருமை நிறம் கொண்டதென்றால் எத்தனை கோடிக்கணக்கான மாதர்கள் அழுது மைகலந்த கண்ணீர் வெள்ளத்தைப் பெருக்கியிருக்க வேணுமென்று ஊஹித்துப்பார்க்க.

---

ஸ்ரீ:

# பகவத்விஷய ரஸப்பெருக்கு

(உண்ணிலாவிய வைவரால்) திருவாய்மொழி 7—1—1.

எம்பெருமான் கீதையிலே *தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா* என்று சொல்லிவைத்து, உடனே *மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாம் ஏதாம் தரந்தி தே* என்றும் சொல்லிவைத்தான். அதாவது—ஒரு குருவி பிணைத்த பிணை ஒருவராலவிழ்க்க வொண்ணாதாப்போலே தான் பிணைத்த மாயப் பிறவிப் பிணையானது ஒருவராலும் கழற்ற வொண்ணாதது என்று முன்னம் சொல்லிவைத்து, என் திருவடிகளையே தஞ்சமாகப் பற்றுவார் யாவரோ அவர்கள் அந்தப்பிணையை எளிதாகக் கழற்றிக்கொள்ள வல்லார்கள் என்று பின்னைச் சொன்னான். அந்தத் திருமுகப் பாசுரத்தில் நம்பிக்கையாலே ஆழ்வார் கீழ்த் திருவாய்மொழியில் [*உலகமுண்ட பெருவாயா* என்கிற பதிகத்தில்] பெரியபிராட்டியாரைப் புருஷகாரமாக முன்னிட்டுத் திருவேங்கடமுடையான் திருவடிகளிலே ஆர்த்தராய்ச் சரணம் புகுந்தார் மாயப்பிறவி மயர்வறுத்து நித்யகைங்கர்ய ஸாம்ராஜ்யம் பெறவேணுமென்று.

அந்த சரணாகதி பலித்ததில்லை. பரதாழ்வானுடைய சரணாகதிக்கு முன்னே தேவதைகளின் சரணாகதி கிடந்ததாய் அதற்குப் பலன் அளித்த பின்னரே பரத சரணாகதிக்குப் பலன் தர வேண்டினாப்போலே—இங்கும் ஆழ்வாருடைய சரணாகதிக்கு முன்னே இவ்வுலகில் சில ஸம்ஸாரிகள் சரணாகதி செய்திருப்பர்கள் போலும்; நாங்கள் வாழலாம்படி ஸர்வோத்துங்கமானதொரு ப்ரபந்தத்தை உபகரித்தருள வேணுமென்று சிலர் சரணாகதி செய்திருந்தார்களாகவேணும்; அதுதான் முந்தின சரணாகதியாகையாலே அதற்குப் பலனளித்த பின்னரே ஆழ்வாருடைய சரணாகதிக்குப் பலனளிக்க வேண்டி எம்பெருமான் தாழ்த்தான்.

ஆழ்வாருடைய சரணாகதிக்கு முன்னே இப்படியொரு சரணாகதி யிருந்திருக்க வேணுமென்னுமிடம் ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்தியாலும் தெரியாநின்றது. ஆழ்வார் தாமே மேலே "எண்ணாதனகளெண்ணும் நன் முனிவரின்பம் தலைச் சிறப்பப் பண்ணார்பாடலின்கவிகள் யானாய்த் தன்னைத்தான்பாடி" என்றருளிச் செய்யாநின்றார்; திருவாய்மொழி யருளிச் செய்

ஸ்ரீரா. 46—3.

கைக்கு நிதானம் கூறுகிற பாசுரமாயிற்றிது. "எண்ணுதனகளெண்ணும் நன்முனிவரின்பம் தலைச் சிறப்ப" என்றவிடத்து ஆழ்வார் திருவுள்ளத்தில் ஓடிக்கிடந்த பொருளாவது—

திருவாய்மொழி அவதரிப்பதற்கு முன்னே முனிவர்களெல்லாரும் திரள்கூடி 'எம்பெருமானுடைய பெருமைகளையெல்லாம் வருணிக்கப் பிறந்த உபநிஷத்துக்களுங்கூட *யதோ வாசோ நிவர்த்தந்தே* என்று பின்வாங்கிப்போயின; அப்படியன்றிக்கே பகவத் ஸ்வரூப ரூப குணவிபூதி சேஷ்டிதங்களையெல்லாம் செவ்வனே பேசவல்லதொரு பிரபந்தம் அவதரிக்க வேணுமென்று பெருமானைப் பிரார்த்திப்போம்' என்று நினைத்தார்களாம். பிறகு திருவாய்மொழி அவதரித்தானபின்பு அம்முனிவர்கள் மறுபடியும் திரள்கூடி 'எம்பெருமானுக்கு இன்னம் சில குணங்களும் இன்னம் சில விபூதிகளும் உண்டாக வேணும்.' என்று நினைத்தார்களாம். இப்படியே நம்பிள்ளை அர்த்தமருளிச் செய்கிறார். * எண்ணுதனகளெண்ணும் நம் முனிவர்* என்கிற மூலத்திற்கு இங்ஙனே பொருள்சொல்லியே தீரவேண்டும். திருவாய்மொழியினால் எம்பெருமானுடைய குணவிபூதிகளெல்லாம் கபளீகரிக்கப்பட்டுவிட்டன என்பது பரம தாற்பரியம்.

இப்பாசுரத்தின்படி எம்பெருமானுடைய ஸ்வரூப ரூப குணவிபூதி சேஷ்டிதங்களைக் குறையறப் பேச வல்லதொரு பிரபந்தம் திருவவதரிக்கவேணுமென்று ஏற்கெனவே சிலர் சரணாகதி செய்திருக்க வேண்டுகையாலே முந்துற முன்னம் அதற்குப் பலனளிக்கவேண்டி எம்பெருமான் ஆழ்வாருடைய சரணாகதியைப் பழுதாக்கினானென்னலாம். இவருடைய சரணாகதிக்கு இப்போதே பலன்தந்தால் திருவாய்மொழி அரைகுறையாயன்றோ போயிருக்கும். முந்தின சரணாகதிக்குப் பலன் முற்றிற்றாகாதே. திருவாய்மொழி தலைக்கட்டவேண்டி ஆழ்வாரை இன்னமும் இவ்விபூதியிலே வைத்தானாயிற்று. முன்னமே இவர் "பாவியேனைப் பல நீ காட்டிப்படுப்பாயோ" என்று வயிறெரிந்திருக்கிறாரே; அந்த வயிற்றெரிச்சல்தானே மேலும் தலையெடுத்து * அந்தோ வடியேனுனபாத மகலகில்லே னிறையுமே யென்று சொன்னவடியேனை, அகற்றுமவற்றின் நடுவேயிருத்தித் துடிக்கவைப்பது தருமமோவென்று கூப்பிடுகிறார் இத் திருவாய்மொழியில்.

ஜிதேந்திரியரில் தலைவரான ஆழ்வார் இந் நிலத்திலிருப்புக்குத் துடிக்கவேண்டிய அவசியமுண்டோ? விஷயங்களும் இந்திரியங்களும் இருந்தாலென்ன? அவற்றில் ஆழ்வார் கலங்குகைக்கு ப்ரஸக்தியில்லையே, துடிப்பானேன்? என்னில்; இதற்கு ஆழ்வார் தாமே இதில் ஆறும் பாட்டில் ஸ்வப்ஷ்டமாக உத்தரமருளிச்செய்கிறார் "விண்ணுளார் பெருமாற்கடிமை செய்வாரையும் செறும் ஐம்புலனிவை, மண்ணுளென்னைப் பெற்றால் என்செய்யா மற்று நீயும் விட்டால்" என்று.

* மாறன் பணித்த தமிழ்மறைக்கு ஆறங்கங் கூற வவதரித்த மங்கையர்கோன் தம்முடைய பெரிய திருமொழியிலே இத்திருவாய்மொழியை விவரியா நிற்பாராய் இரண்டு திருமொழிகள் அருளிச் செய்கிறார்; [1. திருவுக்குந் திருவாகிய செல்வா. 2. மாற்றமுள.]

இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகள் காண்மின்—"*முடியானேயிற் காணங்களையுடைய இவர்க்கு இந்த்ரியவச்யதை யுண்டென்னுமிடம் கீழோடு விருத்தமன்றோ வென்னில்; அசல் அகம் நெருப்புப்பட்டு வேவாநின்றால் தந்தாம் அகம் பரிஹரியாதிருப்பாரில்லையிறே; புற்றினருகே பழுதை கிடந்தாலும் ஸர்ப்பம் என்று புத்திபண்ணி ப்ரமிக்கக் கடவதாயிருக்குமிறே. அங்குத்தைக்கும் இங்குத்தைக்கும் பொதுவான வுடம்போடே யிருக்கிறபடியைக் கண்டார்; நாட்டாருடைய இந்த்ரிய வச்யராய்க் கிடந்து நோவுபடுகிறபடியையும் கண்டார்; இது நம்மளவும் வரில் செய்வதென்? என்று அஞ்சிக் கூப்பிடுகிறார்." என்பதாம்.

இந்த ப்ராக்ருத மண்டலத்திலே யிருந்தால் என்ன அனர்த்தம் விளையுமோ என்கிற அச்சம் மேலிட்டு ஓலமிடுகிறார் என்றதாயிற்று. ... ....(இனி பாசுரம்) .... (*)

உண்ணிலாவிய வைவரால்குமைதீற்றி என்னையுன்பாதபங்கயம்*
நண்ணிலாவகையே நலிவானின்னமெண்ணுகின்றாய்*
எண்ணிலாப்பெருமாயனேயிமையோர்களேத்தும் உலகம்மூன்றுடை*
அண்ணலே யமுதே யப்பனே என்னையாள்வானே ! (க)

அளவிடமுடியாத ப்ரக்ருதி தத்வத்தை உபகரணமாக வுடையவனே! தேவர்களாலே துதிக்கப்படுபவனும் மூவுலகங்களையும் சேஷமாக வுடையவனுமான ஸ்வாமியே!பரம போக்யனே! மஹோபகாரங்கள் செய்பவனே! என்னை நிர்வஹித்துக்கொண்டு போருமவனே!, அடியேனை உள்ளே நிரந்தர வாஸம் பண்ணுகின்ற பஞ்சேந்திரியங்களாலும் நலிவுறும்படி பண்ணி உனது திருவடித் தாமரைகளைக் கிட்டாதபடியாகவே இன்னமும் ஹிம்ஸிப்பதாக எண்ணியிருக்கிறாய் போலும். என்பது பாசுரத்தின் பொருள்.

* * * பிரானே! உன் திருவடிகளையே சரணமாகப்பற்றின வென்னை இந்திரியங்களை யிட்டு நலியப் பார்க்கிறாயே! இது தகுதியோ? என்கிறார். பகைவர் பாஹ்ய சத்ருக்களென்றும் ஆந்தரசத்ருக்களென்றும் இருவகைப்படுவர்; ஆயுதங்களாலே நமது உடலுக்கு நலிவை விளைக்கும் பகைவர் பாஹ்ய சத்ருக்களாவர். அப்படியன்றிக்கே கண்ணுக்குத் தெரியாத படி உள்ளேயிருந்துகொண்டே நலிகின்ற பஞ்சேந்திரியங்கள் ஆந்தர சத்துருக்களெனப்படும்; இத்தன்மையை 'உண்ணிலாவிய வைவரால்' என்று ஆழ்வார் தெரிவிக்கின்றார். அசேதநங்களான இந்த்ரியங்களை 'ஐந்தால்' என்று சொல்லவேண்டுமிடத்து 'ஐவரால்' என்றது—இந்த்ரியங்களானவை அசேதனங்களைப் போலன்றிக்கே சேதநர்கள் போலவே நின்று நலியுந் தன்மையைப் பற்ற. திருமங்கையாழ்வாரும் "உடனின்று ஐவரென்னுள் புகுந்து" என்றருளிச் செய்தது காண்க.

குமைதீற்றி—குமைக்கும்படி பண்ணி; குமைத்தலாவது ஸஹிக்க வொண்ணாதபடி ஹிம்ஸித்தல். இந்திரியங்கள் ஹிம்ஸித்தால் அதற்காக எம்பெருமானை நொந்து பேசலாமோ வென்னில்; எம்பெருமானுக்கு ஹ்ருஷீகேசனென்று ஒரு திருநாமமுண்டு; ஹ்ருஷீகமென்று இந்திரியங்களுக்குப் பெயர்; அவை தானிட்ட வழக்காம்படியிருப்பவன் என்பது பற்றியே ஹ்ருஷீகேசனென்று திருநாமமாயிற்றென்பதை ஆழ்வார் தாம் அறிந்தவராதலால் இங்ஙனே சொல்லுகிறார்போலும். பிரானே ! உனக்கு விதேயமல்லவோ அவை; நீ நியமித்தால் கேளாவோ அவை; நீயேயன்றோ அவற்றை ஏவி நலிகின்றாய் என்கிறார்..

தமக்கு நலிவாவது இன்னதென்பதைக் காட்டுகிறார் "உன் பாத பங்கயம் நண்ணிலா வகையே" என்று. திருவடிகளைக் கிட்டாதொழிகையே இவ்வாத்மாவுக்கு நலிவு என்றிருக்கிறார். நலிவான் இன்ன மெண்ணுகின்றாய்—*அகலகில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கையுறை மார்பா ! உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே * என்றபின்பும் என்னை இங்ஙனம் நலியப் பார்க்கிறாயே, இது தருமமோ? என்கிறார்.

ஆழ்வார் இங்ஙனே யருளிச் செய்வதைப்பற்றி ஸ்ரீவசநபூஷணத்தில் சில ஆராய்ச்சிகள் தோன்றியுள்ளன; அதில் மூன்றாம் பிரகரணத்தில் "ஸ்வதோஷாநுஸந்தாநம் பயஹேது; பகவத் குணாநுஸந்தாநம் அபயஹேது; பயாபயங்களிரண்டும் மாறாடில் அஜ்ஞதையே ஸித்திக்கும்" என்று முந்துற அருளிச்செய்தார். சேதநன் தன்னுடைய தோஷங்களைப் பார்த்தவாறே பயப்படவும், எம்பெருமானுடைய திருக்குணங்களை அநுஸந்தித்தவாறே அந்த பயம் தீரவும் நேரும்; இப்படியன்றிக்கே 'அநாதிகாலம் தனக்குப் பாதந்த்ரமான ஆத்மவஸ்துவை கர்மவ்யாஜத்தாலே ஸம்ஸரிக்கச் செய்து போந்தவனன்றோ, கேட்பாரற்ற ஸ்வதந்திரனானவன் இன்னமும் ஸம்ஸரிப்பிக்கில் செய்வதென்?' என்று அவன்படியை நினைத்து

பயப்படுகையும், 'முன் போலன்றிக்கே நமக்கிப்போது ஆத்ம குணங்களுண்டாகையால் பேற்றில் கண்ணழிவு இல்லை' என்று தன் படியை நினைத்து பயம் கெடுகையும் ஆகுமானல் அவிவேகமே ஸித்தித்து விடும்; தான் தனக்கு நாசகனென்று பயப்படுகையும் ஈச்வரனே ரக்ஷகனென்று பயம் கெடுகையுமாகிற விவேக வேஷம் இல்லாமையாலே அவிவேகமே ஸித்தித்துவிடும்—என்பதாக அருளிச் செய்தார்; இதற்குமேலே தோன்றக்கூடிய சங்கையை அநுவதித்துப் பரிஹாரமும் காட்டியருளினர் (பிள்ளை லோகாசார்யர்);

> "ஆனல் *நலிவானின்ன மெண்ணுகின்றாய் * ஆற்றங்கரை வாழ்மரம்போலஞ்சுகின்றேன் என்கிற பாசுரங்களுக்கு அடியென்னென்னில்; பந்தாநுஸந்தாநம். ப்ரஜை தெருவிலே யிடறித் தாய் முதுகிலே குத்துமாபோலே நிருபாதிக பந்துவாய் சக்தனுயிருக்கிறவன் விலக்கா தொழிந்தால் அப்படிச் சொல்லலாமிறே. ப்ரஜையைக் கிணற்றின் கரையில் நின்றும் வாங்காதொழிந்தால் தாயே தள்ளினளென்னக் கடவதிறே."

என்கிற சூர்ணிகைகள் அருமருந்தானவை. இவற்றின் கருத்தாவது— எம்பெருமான் படியை நினைத்து பயம் தீரவேணுமே யல்லது பயப்படுகை கூடாதென்பது சாஸ்த்ரார்த்தமானல் தத்வ வித்துக்களில் தலைவரான ஆழ்வார்கள் *உண்ணிலாவிய வைவரால் குமை தீற்றி யென்னையுன் பாதபங்கயம் நண்ணிலாவகையே நலிவானின்ன மெண்ணுகின்றாய் * *மக்கள் தோற்றக் குழிதோற்றுவிப்பாய் கொலென்று இன்னமாற்றங்கரை வாழ்மரம் போலஞ்சுகின்றேன் என்று அருளிச்செய்த பாசுரங்களுக்குக் கதியென்ன? என்று சங்கை; அதற்குப் பரிஹாரமாவது—பேறும் இழவுமான இரண்டும் அவனாலே யென்னலாம்படி நிருபாதிகரக்ஷகனன அவனோடு தங்களுக்குண்டான ஸம்பந்தத்தினுடைய அநுஸந்தானமே அப்படியருளிச் செய்கைக்குக் காரணம். ஸம்பந்தாநுஸந்தானத்தாலே இப்படி அவன் குறையாகச் சொல்லலாமோ வென்னில், விளையாட்டுக்காகத் தெருவிலே யோடித்திரிகின்ற ப்ரஜை, அங்கே இடறிக் கால் நொந்தவாறே அழுதுகொண்டு அகத்திலே வந்து தனக்கு இந்த வேதனை வந்தது தாயாலேயாக நினைத்து அவள் முதுகிலே குத்துமாபோலே, ஒழிக்க வொழியாத உறவுடையனாய் நலிவைத் தவிர்க்கைக்கு சக்தனுமாயிருக்கிறவன் நலிவுபடவிட்டு விலக்கா தொழிந்தால் 'அவன் இவற்றையிட்டு நலிவிக்கிறான்' என்னலாமன்றே. விலக்காத மாத்திரமே கொண்டு அவன் செய்தானென்னலாமோ வென்னில், கிணற்றின் கரையிலே ப்ரஜையிருக்கிறபடியைக் கண்ட மாதாவானவள் அப்போதே ஓடிச்சென்று கிணற்றின் கரையில் நின்றும் வாங்காவிட்டால் கிணற்றிலே ப்ரஜை விழுந்தவளவில் 'தாய் அப்போதே சென்று எடுத்தாளாகில் இந்த ஆபத்து நேருமோ? கிணற்றின் கரையிலிருப்பை இவள் இசைந்திருக்கையாலன்றோ குழந்தை விழுந்தது; ஆனபின்பு இவளன்றோ தள்ளினள்' என்று லோகம் சொல்லக்கடவதன்றோ. ..............இதற்கு மேலும் அறிந்துகொள்ளவேண்டிய அர்த்த விசேஷங்களை ஸ்ரீவசநபூஷண தத்வ்யாக்யானங்களில் அறிந்துகொள்வது.

இத் திருவாய்மொழியில் முன்னடிகளெல்லாம் அஞ்சிக் கதறுகிறபடியாயும், பின்னடிகளெல்லாம் அச்சந்தீர எம்பெருமான் படிகளைப் பேசுகிறபடியாயும் செல்லாநின்றது. பிள்ளை திருநறையூரரையர் "இப்பாட்டுக்களில் முன்னடிகளெல்லாம் புலியின் வாயிலே அகப்பட்ட ப்ரஜை தாய்முகத்திலே விழித்துக்கொண்டு புலியின் வாயிலே கிடந்து நோவுபடுமாபோலேயாயிருக்கிறது" என்று பணிப்பராம்.

எண்ணிலாப் பெருமாயனே !—எண்ணிறந்த மிகவும் ஆச்சரியமான குணங்களை யுடையவனே! என்பது ஒரு நிர்வாஹம். எண்ணிறந்த செயல்களைச் செய்யவல்லதான ப்ரக்ருதியைப் பரிகரமாக வுடையவனே! என்பது மற்றொரு நிர்வாஹம். .... ....

# ஸ்ரீகாஞ்சீ தேவப்பெருமாள் ஸன்னிதி

# மணவாளமாமுனிகள் மஹோத்ஸவ வைபவம்.

செந்தமிழ்வேதியர் சிந்தை தெளிந்து சிறந்து மகிழ்ந்திடவும், சீருலகாரியர் செய்தருள் நற்கலை தேசு பொலிந்திடவும், மந்த மதிப்புவிமானிடர் தங்களை வானிலுயர்த்திடவும், மாசறுஞானியர் சேரெதிராசர்தம் வாழ்வு முளைத்திடவும், கந்த மலர்ப்பொழில் சூழ்குருகாதிபர் கலைகள் விளங்கிடவும், காரமர்மேனி யரங்கநகர்க்கிறை கண்கள் களித்திடவும் இந்த நிலந்தனில் வந்தவதரித்த மணவாளமாமுனிகளுக்கு ஐப்பசித் திருமூல மஹோத்ஸவம் ஸகல திவ்ய தேசங்களிலும் பத்துநாள் வெகு சிறப்பாக நடந்தாலும் மற்ற திவ்ய தேசங்களிலெல்லாம் நடப்பது ஒருதட்டாயும், தேவப்பெருமாள் ஸன்னிதியில் நடப்பது ஒருதட்டாயும் நெடுநாளாகவே ப்ரஸித்தியுள்ளது. இம்மஹோத்ஸவத்தை இங்கு நேரில் வந்து ஸேவித்தவர்களுக்கே இதன் பெருமை புலனாகும். நேரில் ஸேவிக்க பாக்யமில்லாதவர்களும் செய்தியறிந்து மகிழ்வதற்காக இம்மஹோத்ஸவ வரலாறு சுருக்கமாக எழுதப்படுகிறது.

15—10—52 புதன்கிழமையன்று உத்ஸவாரம்பம். முன்னதாகவே விசித்ராலங்காரங்களுடன் உள் திருமுற்றத்திலும் வெளித்திருவாசலிலும் மிகவிசாலமான கொட்டகைப் பந்தல் தேவஸ்தான அதிகாரிகளால் வழக்கப்படி அமைக்கப்பட்டிருந்தது. நாடோறும் தேவப்பெருமாளுடைய நித்யப்படி திருவாராதன க்ரமங்கள் முடிந்தவுடனே (பகல் 12 மணிக்கு) ஸ்வாமி பெரிய திருவோலக்கமாக அலங்காரத் திருமஞ்சனம் கண்டருள்வது. உடனே திவ்ய ப்ரபந்த ஸேவை தொடக்கமாகி திருமண்காப்பு அவஸரம் ஆகி மாலை 4 மணி வரை ஸேவித்து தீர்த்த ப்ரஸாத விநியோகாதிகளுடன் சாத்துமறை தலைக்கட்டும். *மெய்யடியார்கள் தம் ஈட்டங் கண்டிடக் கூடுமேல் அதுகாணும் கண்பயனாவதே* என்னும்படி விலக்ஷணர்களான நூற்றுக் கணக்கான ஸ்வாமிகள் ஸேவை ஸாதிப்பர்கள். மாலை 4-30க்கு கோஷ்டிமுடிவாகும். பிறகு தேவப்பெருமாளுடைய நித்யாநுஸந்தான கோஷ்டி நிறைவேறினபின் 7 மணி முதல் 8 மணி வரை ஸ்வாமி வெளித்திருவாசல் கொட்டகைப் பந்தலில் பத்தியுலாவி ஊஞ்சலும் கண்டருளி, பிறகு திருவாய்மொழி ஸேவை கோஷ்டி லோகோத்தரமாக நடைபெற்று 10-30க்கு தீர்த்த ப்ரஸாத விநியோகாங்கமாக சாத்துமுறை கோஷ்டி முடிவுபெறும். ஒன்பது நாள் வரையில் இதுவே க்ரமமாக நடைபெற்றது.

தினப்படி பகல் வேளையுத்ஸவம் 40, 50 ரூ திட்டத்திலும், இரவு வேளையுத்ஸவம் 100—125 ரூ. திட்டத்திலும் நடைபெறுவது. (24—10—52) இனித் திருமூல நன்னாளன்று சாத்துமுறை வைபவம். பின்மாலை 4-மணியிலிருந்தே தொண்டர்களின் குதூஹலம் வாசாமகோசரம். அப்போது ஸகல பக்தர்களும் குழாங்கூடி ஸ்ரீஸ்வாமியின் ஸ்ரீஸூக்திகளையும் ஸ்வாமி விஷயமான ஸ்ரீஸூக்திகளையும் பெருமிடறு செய்து திருவீதி வலமாக அநுஸந்தித்து 6மணி யளவில் முடிந்தது. திருவெஃகா ஸ்ரீயதோக்தகாரி யெம்பெருமானும் மணவாளமாமுனிகளும் தேவப்பெருமாள் திருவீதிகளிலெல்லாம் ஆச்சரியமான மஹோத்ஸவம் கண்டருளினது காலை 7-மணி முதல் 10 மணி வரை. அதன் பிறகு தேவப்பெருமாள் திருமலையில் நின்றும் கீழே கண்ணாடியறைக்கு எழுந்தருளப் புறப்பாடு கண்ட

ருளினது 12-மணிக்குள். அதன் பிறகு மணவாளமாமுனிகளுக்குத் திருமஞ்சனம் உபக்ரமமாகி 3-மணிக்கு ஈரவாடைத்தீர்த்தம். பிறகு பெரிய திருமொழி ஸேவை நடந்து மாலை 7-மணிக்கு எம்பெருமானார் பஹுமானம் பெற்றுத் திருப்பாவை சாத்துமுறை கோஷ்டி ஆயிரம் ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸேவை ஸாதிக்கும் பெரிய திருவோலக்கமாக நடைபெற்றது. 8மணிக்குள் தீர்த்த ப்ரஸாத விநியோகங்கள் நிறைவேறினபின், தேவப்பெருமாள் ஸகல திவ்யாபரண திவ்யபீதாம்பர திவ்ய மால்யாதி பூஷிதராய் "சங்கும் சக்கரமும் சிரித்தமுகமும் தொங்கும் பதக்கங்களும் எங்குங் கண்டறியாத ஸேவையுடனே" என்னும்படியாகப் புறப்பட்டருளி ஸன்னிதி வீதியையலங்கரித்துத் திருக்கோபுரவாசல் வந்து சேர்ந்தவாறே, இன்று வெள்ளிக்கிழமையும் சேர்ந்தபடியாலே பெருந்தேவித்தாயாரும் உடன் புறப்பாடு கண்டருளி வாணவேடிக்கை முதலான வாசாமகோசரஸம்ப்ரமங்களுடனே ஆழ்வார் திருவீதி ப்ரதக்ஷிணமாய் ஸ்வாமி ஸன்னிதிப் பந்தலில் இரவு 11மணிக்குச்சேர்ந்தபடி. ஸ்வாமி வெளியே யெழுந்தருளி மரியாதை பெற்று திவ்ய தம்பதிகளுடனே ஸன்னிதியுள்ளே யெழுந்தருளி சேமத்தளிகையமுது செய்து விநியோகமானவுடனே திருவாய்மொழி ஸேவையும் ஸ்வப்ரபந்த ஸேவையும் நான்குமணி காலம் நடைபெற்றது. விசேஷ போஜ்யாஸன நிவேதனங்களுடன் திருவாராதனமான பின் சாத்துமுறை தீர்த்த ப்ரஸாத விநியோகாதிகள் முடிவுபெறுவதும் கதிரவன் குணதிசைச் சிகரம் வந்தணைவதும் ஸமகாலமாயிருந்தது. இன்றைய செலவுகள் 1000 ரூ. திட்டம்.

பிறகு திவ்ய தம்பதிகளும் மாமுனிகளுமாகப் புறப்பாடு கண்டருளித் திருமலைக்கெழுந்தருளும் ஸந்நிவேசத்தில் திருமலையடிவாரந்தன்னில் மாமுனிகளுக்கு பஹுமானச் சிறப்புகள் ஸாதிக்கும்போது 7-மணியாயிற்று. ஸ்வாமி விடை பெற்றுத் திரும்பித் தாயார் ஸன்னிதியிலும் ஆழ்வார் ஸன்னிதியிலும் சிறப்புகள் பெற்றுத் தம் ஸன்னிதி சேர்ந்து கந்தப்பொடியுத்ஸவமாகும்போது மணி எட்டு. பிறகு பிற்பகலில் இயற்பா ஆயிரமும் 6, 7 மணி காலம் ஸேவை நடைபெற்று இரவு 10-மணிக்கு இயல் சாத்தும் நிறைவேறியது.

இங்ஙனமாக நடந்த இம்மஹோத்ஸவத்தின் சிறப்புக்கு மூலகாரணம் ஹிந்துமத தர்மபரிபாலன ஸபையாகும். தற்காலம் இந்த நடத்திவைத்தவர் இந்த தேவஸ்தானத்தில் எக்ஸிக்யூடிவ் டிரஸ்டியாயிருந்துவரும் ப்ரஹ்மஸ்ரீ. ஜகதீசய்யரவர்கள். இவர்களது நிர்வாஹத்திறமை போற்றத்தக்கது. ஸன்னிதி காரியங்களை யெல்லாம் பெரும்பாலும் தாமே நேராக கவனிக்கின்ற இப்பெரியாருடைய கைங்கரியத்தைத் தேவப்பெருமாளும் பெருந்தேவித்தாயாரும் நெடுங்காலம் கொள்வார்களாக.

இம்மஹோத்ஸவத்திற்குப் பொருளுதவி புரிந்த மஹான்கள் கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலான அனேக திவ்யதேசஸ்தர்களும், மதரூஸ் ஹைதராபாத், ஷோலாபூர் பாம்பே முதலான மஹா நகரஸ்தர்களுமாவர். சென்னை க்ரவுன் டாக்கீஸ் தலைவரான பக்த மணி M. V. நரஸிம்முலு நாயுடு அவர்கள், சாத்துமுறையில் விசேஷமான பங்கு எடுத்துக் கொண்டது பாராட்டத்தக்கது.

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. திருமலை திருப்பதி சின்ன கேள்விராமாநுஜ ஜீயர் ஸ்வாமி சென்ற ஸம்வத்ஸரத்திற் போல இந்த ஸம்வத்ஸரத்திலும் இம்மஹோத்ஸவத்திற்குப் பரிபூர்த்தியாக எழுந்தருளி யிருந்து கோஷ்டியை மிகவும் சோபிக்கச் செய்தருளினது இம்மஹோத்ஸவத்தின் பெருமைகளில் சிகரமானது. ... .... ... *

# திவ்யதேசத்திருநாமத் திரிபுகள்.

—(o)—

ஆழ்வார்களின் மங்களாசாஸனம் பெற்ற திவ்ய தேசங்களில் பல திருப்பதிகளின் திருநாமங்கள் நாளடைவில் திரிவுற்று வழங்கி வருகின்றன. இவற்றில் அவிவேகிகள் மயங்கியிருப்பது ஆச்சரியமல்ல. சில விவேகிகளுங்கூட மயங்கியிருப்பதால் தத்துவத்தை விளக்கிவைப்பது நலமென்று தோன்றி இஃது எழுதப்படுகின்றது. மலைநாட்டில் சில திருப்பதிகளின் பெயர்கள் மலையாளர்களின் வழக்கில் சிதைந்தேயிருக்கின்றன. திருவண் பரிசாரத்தைத் திருப்பதிசாரமென்றும், ; திருவித்துவக் கோடுதன்னை திருமிற்றக்கோடு என்றும், திருவல்லவாழை திருவல்லாய் என்றும், திருவாறன்விளையை ஆரம்முளையென்றும் இப்படி வழங்கிவருகிறார்கள். அவற்றைப்பற்றின திருத்தம் இங்கு அவச்யமன்று. ஆவச்யகமான திருத்தங்களைக் காட்டுகிறோம்.

திருக்கோவலூர். இது நடுநாட்டுத்திருப்பதிகளிரண்டில் ஒன்று. திருக்கோவலூர் என்றே ஆழ்வார்கள் பாடியுள்ளார்கள். 'கோபாலபுரம்' என்பது கோவலூர் என்றாயிற்று என்று பெரியார் சொல்லுகிறார்கள். இதைத் திருக்கோவிலூர் என்றே விவேகிகளுங்கூட வழங்கிவருகிறார்கள். திருக்கோயிலூர் என்று தபால் முத்திரையும் ரைல்ஸ்டேஷன்களில் பிரசுரமும் மலிந்துவிட்டது. அதுவே ஸ்ரீவைஷ்ணவர்களின் நெஞ்சிலும் ஊறிவிட்டதுபோலும். திருக்கோவலூர் என்றே வழங்கவேண்டும்.

திருவிந்தளூர். 'இந்துபுரம்' என்பது இந்தளூர் என்றாயிற்று. இந்தளூர் என்றே ஆழ்வார் பாடல். இதை 'திருவிழுந்தூர்' என்றே பெரும்பாலும் வழங்கி வருகிறார்கள். தபால் முத்திரையும் இப்படியே ஏற்பட்டுவிட்டது. "குத்தாலத்தினருகேயுள்ளது தேரழுந்தூர்; மாயவரத்தினருகேயுள்ளது திருவிழுந்தூர்" என்றும் சிலர் எழுதிவைத்திருக்கிறார்கள். 'திருவை இழந்தவூர்' என்று பொருள்படும்படி இங்ஙனே வழங்குவது அவசியம் மறக்கவும் மறுக்கவும் தக்கது.

திருத்தண்கால். ஸ்ரீவில்லிபுத்தூர் ப்ராந்தத்திலிருக்கின்ற திருத்தண்கால் என்கிற திவ்யதேசம் இவ்விதமாகவே ஆழ்வார் பாடல் பெற்றது. இதை 'திருத்தாங்கல்' என்றே பலரும் வழங்கி வருகிறார்கள். 'திருத்தண்காலுக்கு வழி எப்படி?' என்று ஒரு பெரியாரை நாம் கேட்கநேர்ந்தபோது, அவர் சிறந்த அத்யாபகராயிருந்தும் 'திருத்தண்கால் காஞ்சீபுரத்திலன்றோ இருக்கிறது, இங்கு ஏது?' என்றார்; 'திருத்தாங்கலுக்கு வழி கேட்கிறீரோ?' என்றும் சொன்னார். காஞ்சீபுரத்தில் ஸ்ரீதீபப்ரகாசன் ஸன்னிதியென்கிற விளக்கொளி திவ்யதேசத்திற்கு 'திருத்தண்கா' என்று வ்யபதேசம். திருத்தண்கால் என்றல்ல. *விளக்கொளியை மரதகத்தைத் திருத்தண்காவில்* என்பது திருநெடுந்தாண்டகப்பாசுரம். *யாம் சென்று காண்டும் தண்காவிலே* என்பது பெரியதிருமொழிப் பாசுரம். தண்கால் வேறு, தண்கா வேறு. தண்காலை தங்காலக்ஷேத்ரம் என்று சிலர் வழங்கிவருவதோடு நில்லாமல் அப்படியே ஒரு புராணமும் கல்பனை செய்திருக்கிறார்கள். இது மிகவும் அருவருக்கத்தக்கது. 'தமிழில் தண்கால் என்றும், ஸம்ஸ்க்ருதத்தில் தங்காலமென்றும் ஒப்புக்கொண்டால் என்னபாதகம்?' என்றும் சிலர் கேட்கிறார்கள். 'திருத்தாங்கல் மான்மியம்' என்றே ஒரு புத்தகம் அச்சிட்டிருப்பதுகண்டு மிக வருந்தினோம்.

திருவெவ்வுளூர்- 'எவ்வுள் கிடந்தான்' என்றும் எவ்வுள் பெருமலையை' என்றும் திருமங்கையாழ்வார் பாடலுள்ளது. 'நாகத்தணைக்குடந்தை வெஃகாத் திருவெவ்வுள்' என்று திருமழிசைப்பிரான் பாடலுள்ளது. இதற்குச் சார்பாக வடமொழியில் கிம்க்ருஹ க்ஷேத்ரம் என்கிற வழக்கு உள்ளது. 'கிம்க்ருஹேசஸ்துதி' என்றும் ஒரு துதிநூல் காண்கிறது. திருவள்ளூர் என்று சில ஸாமான்ய ஜனங்கள் வழங்கிவந்ததை மஹான்களும் நெடுநாளாகவே ஆதரித்து வருகிறார்கள். வாயால் வழங்குவது எப்படியிருந்தாலும் எழுத்தில் எழுதுவது இப்படியிருக்கவேண்டாவென்பது நம்முடைய அபிப்ராயம். திருவள்ளூர் என்பதைவிட 'திருவுள்ளூர்' என்றெழுதினால் ஒருவாறு பொருத்தமாயிருக்குமென்று நாம் சில நண்பர்களிடம் ப்ரஸ்தாவித்தோம். இதை ஆமோதித்தார்கள். ந்ருஸிம்ஹப்ரியாவிலும் இப்போதாக இது தலைகாட்டத் தொடங்கியிருப்பது கண்டு மிக மகிழ்கிறோம்.

திருப்புட்குழி. 'புட்குழிபாடும்' என்றும் 'புட்குழி யெம்போரேற்றை' என்றும் ஆழ்வார் பாடலுள்ளது. ஜடாயு க்ஷேத்ரமென்று வடநூல் வழக்கு. இத்தலத்தை திருப்பக்குழி என்று சாமானியர்கள் வழங்கிவருகிறார்கள். 'நேரே நெடுகச் செல்லும் மார்க்கத்திலன்றித் திருப்பத்தில் இத்தலமிருப்பதால் திருப்பக்குழியென்று பேராயிற்று' என்று சிலர் அநியாயமாகப் பொருள் விவரித்து வருகிறார்கள். இதெல்லாம் மிகவும் வெறுக்கத்தக்கதல்லவா? நாளடைவில் இதெல்லாம் விசேஷார்த்த வகுப்பில் சேர்ந்துவிடுமோவென்றும் அஞ்சவேண்டியிருக்கிறது. .... .... .... ...

---

# பிரிவில் திகைப்பு.

(டாக்டர் ஸர். K. S. கிருஷ்ணன், F. R. S. புதுடில்லி.)

தேவியைப் பிரிந்தபின்னைத் திகைத்தனை போலுஞ் செய்கை—கம்பரா.
நான் போந்தபின்பு அக்கோஷ்டி இங்ஙனே நீரற்றதாகாதே—ஈடு.

பிராட்டி பெருமானை விட்டுப் பிரிந்திருந்த காலத்தில் ராமகோஷ்டியில் விளைந்த பிரமாதங்களிலொன்று வாலிவதம். அது நடந்த பிரகாரம் எல்லாருக்கும் தெரியும். அவ்வதத்தைப்பற்றிய தர்மாதர்ம விசாரணை இன்றைக்கும் ஓய்ந்த பாடில்லை. ஸ்ரீராமாயணத்திலேயே ராமனுக்கும் வாலிக்கும் நடந்த ஸம்வாதத்தில் ராமனுடைய வாயிலாக அநேக ஸமாதானங்கள் கூறப்பட்டிருக்கின்றன. வாலியும் முடிவில் கை கூப்பி அச்சமாதானங்களை ஏற்று சாந்தியடைந்ததாக ஸ்ரீராமாயணம் கூறுகிறது. மேலும் வாலி தரைப்பட்டுக் கிடந்த செய்தி கேட்டு அடங்காத கோபங்கொண்டு "தன்னுடைய பிள்ளையைக் கொன்றவனை வாயார வையவேணுமென்று கட்டியடுத்து வந்த தாரையானவள் *ஸா தம் ஸமாஸாத்ய விசுத்த ஸத்வா* என்று பெருமானைக்கண்டு தத்ஸந்நிதி மாஹாத்ம்யத்தாலே கோபந்தணிந்து ஸத்வம் தலையெடுத்து............பகவத்ஸாக்ஷாத்காரம் பிறந்து, வையப்புக்க வாயாலே வாழ்த்துகிறாள்" என்பது வ்யாக்யான சக்ரவர்த்தியான பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீராமாயண ச்லோகங்களையொட்டியருளிச் செய்த ஸ்ரீஸூக்திகள். ராமனை வாழ்த்தினவளவன்றிக்கே அவனை உத்தம தார்மிகனென்றும் அழிக்கவொண்ணாத கீர்த்தியையுடையவனென்றும் அவள் விசேஷித்துக்

கொண்டாடுவதிலிருந்து, அவள் நினைவில் வாலிவதத்தைப் பற்றிய தர்மாதர்ம விசாரம் எழுவதற்கே இடமில்லையென்று தோன்றுகிறது. ஆனாலும் இந்த விசாரணை ஸ்ரீராமாயணம்வதரித்த நாள் முதல் நடந்துவந்ததாகக் கருதுவது மிகையாகாது. எத்தனையோ பண்டிதர்கள் எவ்வளவோ பொருத்தமான ஸமாதானங்கள் கூறியும் கீதாசார்யனிடம் சரமச்லோகம் கேட்டு அர்ச்சுனன் * ஸ்திதோஸ்மி கதஸந்தேஹ: * என்று பணித்தபடி ஸந்தேஹம் தீர்ந்தது என்ற துணிபு ஏற்படுகிறதில்லை. சில வருஷங்களுக்கு முன் நம் ஸ்வாமி அண்ணங்கராசாரியரும் "வாலிவதம் நியாயமானது என்று பண்டிதர்கள் எவ்வளவு பொருத்தமான ஸமாதானங்களைச்சொன்னாலுங்கூட அதை ஏற்றுக்கொள்வது மேட்டுமடையாகவே காண்கிறது" என்று எழுதியுள்ளார்கள்.

அது எப்படியானாலும், நாம் திண்ணமாக அறுதியிடக்கூடியதொன்றுண்டு, அதாவது வாலி தீரக்கழிய அபராதம் பண்ணினவனென்றும், தண்டிக்கத் தகுந்தவனென்றும், பெருமாள் நினைவாலே வதார்ஹனென்றும் ஒரு மனதாக நாம் இசைந்தாலுங்கூட, பெருமாள் அருகே பிராட்டி இருந்திருந்தால் இம்மாதிரியான தண்டனை வாலிக்கோ வாலிபோல்வார்க்கோ கிடைத்திருக்கவே முடியாது என்று. இதற்கடியாக ஆப்ததமரான பிள்ளை லோகாசார்யருடைய ஸ்ரீ ஸூக்தி ஒன்றை நம் ஸ்வாமி அருளிச் செய்கிறார். அதாவது "இவள் ஸன்னிதியாலே காகம் தலைபெற்றது. அதில்லாமையாலே ராவணன் முடிந்தான்" என்று. காகத்துக்கும் ராவணனுக்கும் அபசாரம் ஒத்திருக்க காகம் உயிர் பிழைத்ததற்கு ஒரே காரணம் பிராட்டியின் புருஷகாரம். இந்த காக வ்ருத்தாந்தத்தை அசோக வனத்தில் அநுமனுக்கு அருளிச் செய்யுமிடத்தில் * வதார்ஹமபி காகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத் * என்று காகம் உயிர் தப்பினது பெருமாளுடையக்ருபையினால் என்பது பிராட்டியின் பாசுரமானாலும் அவள் புருஷகாரமே அதற்குக் காரணமென்னத் தட்டில்லை. அப்பாசுரத்தில் க்ருபயா என்ற பதத்திற்கு "க்ருபையே வடிவெடுத்தவளான பிராட்டியைக் கொண்டு" என்று ஸ்வாமி அருளிச்செய்யும் ரஸவத்தான சப்தார்த்தம். வாலியின் அபராதமோ காகத்தின் அபராதத்தை எவ்விதத்திலும் விஞ்சியதில்லை. ஆகவே பிராட்டி ஸன்னிதியில் இம்மாதிரியான வதம் நிகழ்ந்திருக்கமுடியாது என்பது திண்ணம்.

இதற்கனுகுணமாக கம்பராமாயணச்செய்யுள் ஒன்றையும் நம் ஸ்வாமி இவ்விடத்தில் உபகரித்திருக்கிறார். அதாவது வாலிவதப் படலத்திலுள்ள

கோவியல்தருமமுங்கள் குலத்துதித்தோர்கட்கெல்லாம்
ஓவியத்தெழுதவொண்ணா வுருவத்தாயுடைமையன்றோ
ஆவியைச்சனகன்பெற்ற வன்னத்தை அமிழ்தின்வந்த
தேவியைப்பிரிந்தபின்னைத் திகைத்தனைபோலும்செய்கை.

என்ற செய்யுள். இதில் உயிரானது தேவியைப் பிரிந்தபின்னை (நீ) திகைத்தனைபோலுஞ் செய்கை என்ற நாலாவது அடி.

இவ்வர்த்தத்தையே விசேஷித்து ப்ரதிபாதிப்பதான சிலபாசுரங்கள் "அகலகில்லேன்" என்ற பாட்டின் ஈட்டில் (திருவாய்மொழி 6—10—10) காணப்படுகின்றன. இந்த ஈட்டு ஸ்ரீஸூக்திகளை எடுத்துக்காட்டுவதே இச்சிறு கட்டுரையின் முக்கிய நோக்கு.

இப்பாட்டு நம்மாசாரியர்கள் விசேஷித்து உகந்தபாட்டுக்களிலொன்று. இதன் ஈடு வெகு விஸ்தாரமாகவும் அநேக ரஹஸ்யார்த்தங்களை விவரிப்பதாகவும் அமைந்துள்ளது.

பிராட்டியின் அபயப்ரதானமான *பாபாநாம் வா சுபாநாம் வா வதார்ஹாணாம் ப்லவங்கம, கார்யம் கருணமார்யேண ந கச்சிந்நாபராத்யதி* என்ற ப்ரஸித்தமான ச்லோகத்தின் வ்யாக்யானமும் இந்தப்பாட்டின் ஈட்டிலடங்கியுள்ளது. பிராட்டியை பஹுப்ரகாரமாக நலிந்த ராக்ஷஸிகளைத் தண்டிப்பதற்கு அனுமதிகேட்ட அனுமனுக்கு அருளிச்செய்த ச்லோகம் இது. ப்ரக்ருத விஷயத்துக்குத் தேவையான ஈட்டுப்பாசுரங்களை மட்டும் இங்கு எடுத்துக் காட்டுகிறோம்.

அவையாவன—

கார்யம் கருணமார்யேண—இவர்கள் புண்ய பாபங்கள் கிடக்க: இப்போது ஒடுகிற தயநீய் தசையைப் பாராய். உன்கையிலேயகப்பட்டு "நாம் என்படக்கடவோம்" என்று தியங்குகிறபடிபாராய். இவர்களுக்கு வேறு ரக்ஷகரில்லையே. இப்போது இவ்வளவில் நாம் இரங்கவேணுங்காண். ஆர்யேண—இவையெல்லாம் இப்போது நான் கற்பிக்கவேண்டும்படியாவதே உனக்கு. ஐந்த்ர வ்யாகரண பண்டிதனென்கிறது பொய்யோ? அவையுமெல்லாம் கற்றுக் கேட்டிருக்கச் செய்தேயும், இப்போது ராமகோஷ்டியில் பரிசயம் பின்னாட்டின படியாகாதே. அக்கோஷ்டியிற் பழக்கமிறே நீ இங்ஙன் சொல்லவல்லையாயிற்று. நான் போந்த பின்பு அக்கோஷ்டி இங்ஙனே நீரற்றதாகாதே என்று கருத்து. [ந கச்சிந்நாபராத்யதி] ஸம்ஸாரத்தில் குற்றமில்லாதார் ஆர்! திரை நீக்கிக் கடலாடப் போமோ?"............எல்லாப்படியாலும் பெருமாள் ஒரு விஷயத்தை முனிந்தவன்று ஆறவிடுகைக்கு நானுண்டு; நானும் அவ்வழி போகவேண்டி இருந்தவன்றைக்கு நீயுண்டு என்றிருந்தேன். நீயும் இங்ஙனே யானால் அபராதஞ் செய்தார்க்குப் புகுவாசல் உண்டோ" என்கிறாள்.] என்பவை.

ரஸஜ்ஞர்களுக்குப் பரமபோக்யமாக அமைந்தவை இப்பாசுரங்கள். இன்னருள் சுரந்து இம்மாதிரியான சுவைமிக்க பாசுரங்களை நமக்குத் தந்து உதவினவர்களை "தார்மிகராயிருப்பார் சிலர் ஈரச்சொற்களையிட்டுப் போவதே!" என்று நம்மாசாரியர்கள் ஈடுபட்டுக் கொண்டாடுவது ஒருவிதத்திலும் மிகையாகாது. ... .... ... (*)

---

## புஸ்தக விமர்சனங்கள்

### 1

**சது:ச்லோகீ வ்யாக்யானம்:** நாயனாராச்சான்பிள்ளை அருளியது.

பதிப்பாசிரியர்: ஸ்ரீ. உ. வே. K. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி, அட்வகேட்
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சிராப்பள்ளி. விலை ரூ. 1—8—0.

ஆளவந்தார், எம்பெருமான் விஷயமாக ஸ்தோத்ரரத்னத்தையும் பெரியபிராட்டியார் விஷயமாகச் சது:ச்லோகியையும் அருளியிருக்கிறார் என்பது ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியில் ஸுப்ரஸித்தம். அப்படியே, ஸ்தோத்ர ரத்னத்திற்குப் பெரியவாச்சான் பிள்ளையும், சது:ச்லோகிக்கு அவருடைய திருக்குமாரரான நாயனாராச்சான்பிள்ளையும் வியாக்கியானம் செய்தருளியிருக்கிறார்கள் என்பது ஸ்ரீவைஷ்ணவர்களனைவரும் அறிந்தது. நாயனாராச்சான் பிள்ளையின் சது:ச்லோகீபாஷ்யம் தெலுங்கு லிபியிலேயே அச்சிடப்பட்டிருந்தது. வியாக்கியானத்தில் எடுக்கப்பட்டுள்ள பல நூற்றுக் கணக்கான ஸம்ஸ்க்ருதப்ரமாணங்களுக்குத் தமிழில் அர்த்தமும் ஆகரமும் கொண்ட ப்ரமாணத்திரட்டுடன் தமிழ் லிபியில் இப்போது அழகாக அச்சிட்டு வெளியிடப்பட்டுள்ளது. பெரியவாச்சான்பிள்ளை நாயனாராச்சான் பிள்ளைகளுடைய ஸ்தோத்ர சது:ச்லோகீ வியாக்கியானங்களை மிகவும் தழுவியே ஸ்ரீவேதாந்த தேசிகர் தம்முடைய ஸ்தோத்ர சது:ச்லோகீ பாஷ்யங்களை இயற்றியிருக்கிறார் என்பதையும்,

இம்மூன்று பேராசிரியர்களுக்குள்ளும் பெரும்பாலும் ஸாமரஸ்யமே உள்ளதென்பதையும், இவைகளைச் சேர்த்து ஸேவித்தால் இரண்டு சது:ச்லோகீ பாஷ்யங்களிலும் பாடசோதனம் செய்யவேண்டிய இடங்கள் பல உள்ளனவென்பதையும், பதிப்பாசிரியர் தம்முடைய முகவுரையில் மிகுந்த ஆராய்ச்சியுடன் காட்டியிருக்கிறார். ஸ்தோத்ரரத்னம், திருப்பல்லாண்டு முதல் திருவந்தாதி, பெருமாள் திருமொழி' திருவாசிரியம், பெரியதிருவந்தாதி முதலானவற்றுக்குப் பெரியவாச்சான்பிள்ளை அருளிய வியாக்கியானங்களை இப்பதிப்பாசிரியர் இம்மாதிரியே ப்ரமாணத்திரட்டுடன் வெளியிட்டுள்ளார் என்பதும் மேலும் பல ஆசார்யக்ரந்தங்களையும் வெளியிட உத்ஸாஹங்கொண்டிருக்கிறார் என்பதும் குறிப்பிடத்தக்கது. ஸ்ரீவைஷ்ணவர்கள் இப்பதிப்புகளை வாங்குவதன்மூலம் இந்நன்முயற்சிக்கு ஆதரவளிக்கவேண்டும்.

## 2

ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா—ஆசார்யஜயந்தி மலர்=இவ்வாண்டுதன்னிலும் இது வெளிவந்திருக்கின்றது. சென்றவாண்டில் புரட்டாசி மாதத்தில் வெளிவந்தது; இவ்வாண்டில் ஐப்பசி மாதத்தில் வெளிவந்திருக்கின்றது; இவ்வளவே வாசி. இம்மலரை நாம் ஆராய்ச்சி செய்யாது விட்டுவிடாமல் அவசியம் ஆராய்ச்சி செய்யவேணுமென்று இம்மலரிலுள்ள சில வியாஸங்கள் மிகவும் தூண்டுகின்றபடியால் சிறிது ஆராய்ச்சி செய்ய ப்ராப்தமாகிறது. சென்றவாண்டின் மலரை ஆராய்ச்சி செய்ததன் பலனாக விளைந்த விவாதங்கள் இன்னும் இடையறாது வளர்ந்தும் செல்லாநின்றன. இந்நிலைமையில் இப்புதிய மலரைப்பற்றின ஆராய்ச்சியும் அவதரிப்பது நிரங்குச ஸ்வதந்த்ரனுடைய விலக்ஷண ஸங்கல்பமடியாகவேயாம். ஆகுக.

குணங்களையும் தோஷமாக்குவர் பலர்; தோஷங்களையும் குணமாகக் கொள்வர் சிலர். இவ்விரு வகுப்பிலும் நமக்கு அந்வயமில்லை. குணங்களைக் குணமாகவும் தோஷங்களை தோஷமாகவுமே கொள்வது நம்முடைய பணி. தோஷங்களையும் குணமாகவே கொள்வது மிகச் சிறந்த குணமாயினும் அதனை எம்பெருமான் அடியேனுக்கு ஸங்கல்பித்தருளவில்லை. விஷய விமர்சங்களில் அது குணமாகமாட்டாதென்பதும் பெரியார்களின் துணிபு. துஷ்டமென்றோ ஸுஷ்டுவென்றோ நமது கையினாலோ வாயினாலோ ஸ்தாபிக்கப்பட்டதொன்றை மாற்றுவதற்கு உலகமெல்லாம் திரண்டாலும் ஊழிதோறூழியோவாது வாதப்போர் புரிந்தாலும் இறையும் பலன் காணநேராதென்பது நெடுநாளாகவே உலகம் கண்டதொன்றும். * அஹம் வேத்மி மஹாத்மாநம் * என்ற கணக்கிலே இவ்வுண்மையை உள்ளபடியறிந்தவர்கள் இவ்வுலகின்கண் பலருளரெனினும் அந்தரங்க ஸாக்ஷ்யத்தை ஈஷத்தும் அபலபியாமலும் அஸூயுக்களுக்கும் ஸபக்ஷவிபக்ஷர்களுக்கும் அஞ்சாமலும் நாடுநகரமும் நன்கறிய அதனை வெளியிட்ட மஹான் ஒருவரே; அவர்தாம் (சென்னை அட்வகேட்) ஸ்ரீமத் D. ராமஸ்வாமி ஐயங்கார். பொய்யாமொழிப்புலவரான அப்பெரியாரைப் பொய்ம்மொழியராக்கவேணுமென்று பலரும் பாடுபடுவது அவர்கள்தமக்கு மேன்மேலும் பரிபவத்தையே பலிப்பிக்கின்றதென்பதையும் பார்த்து வருகின்றதுலகம். இதுகாறும் பார்த்தது சிறிது; இனிமேல் பார்க்கவிருப்பதே பெரிதென்க. * சொல்லுக சொல்லைப் பிறிதோர் சொல் அச்சொல்லை, வெல்லுஞ் சொல்லின்மையறிந்து * என்ற குறளின்படியே சொல்லி வெல்லுகின்ற நமக்கு, எத்தனை மலர்கள் தோன்றினும் எத்தனை பண்டிதர்கள் ஆவேசங்கொண்டு கிளர்ந்தாலும் ஆனந்தத்திற்கு அளவில்லையென்றறிக.

தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்களென்று வழங்கப்படும் வகுப்பினரில் தற்காலம் ஜ்ஞானசீல வயோவ்ருத்தராய் விளங்குபவர் ஸ்ரீமத். திருச்சி. ஏ. வி. கோபாலாசார்யஸ்வாமியொரு

வரே. நல்ல படிப்பு. ஆழ்ந்த விவேகம். ஆச்சரியமான மேதை. அற்புதமான ஆராய்ச்சி சக்தி. இந்த வயதிலும் சோர்வு சோம்பலின்றி ஸம்ப்ரதாயத்திற்கு உழைக்கும் உத்ஸாஹம் இப்பெரியாரொருவர் பக்கலிலேயே காண்பதாகும். ஸமரஸப்பான்மையிலும் தலைநின்ற இம்மஹான் அடியேனுடைய வியாஸங்களையும் மற்றும் பல க்ருதிகளையும் ஒன்று விடாமல் கடாக்ஷித்தருளி அப்போதைக்கப்போது உள்குழைந்து உள்ளுருகி விடுத்தருளும் ஸ்ரீமுகங்கள் எண்ணிறந்தவை. இப்படிப்பட்ட மஹான்கள் உகப்பது போதும் நமக்கு. இப்படிப்பட்டவர்களோடு நமக்கு வாதப்போர் நேர்ந்து பங்கம் விளைந்தாலும் *லிகுசகுசாபாததாடநம் ச்ரேய: * என்ற கணக்கிலே மிகவுகப்பேயாகும்.

மஹாஜ்ஞானவைராக்யநிதியாய் மஹாப்ராமாணிகராய் நிந்தாபரிஹாஸாதிகளைக் கனவிலுமறியாதவராயெழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீமத் பரமஹம்ஸ. ஸ்ரீகோழியாலம் ஸ்வாமி ஸமீபகாலத்தில் அடியேனை நோக்கி தத்வப்ரகாசமென்றும் தத்வதீபிகையென்றும் இரண்டு சிறுநூல்களையியற்றி வெளியிட்டருளி இதற்கு உடனே பதில் தெரிவிக்கவேணுமென்று க்ரந்தத்திலேயே யெழுதி நியமித்திருந்தார். அதை சிரஸாவஹித்து மறுநாளே தத்வப்ரகாச பராமர்சமென்றும் தத்வதீபிகா விமர்சமென்றும் இரண்டு ப்ரத்யுத்தர ப்ரபந்தங்களை விஜ்ஞாபித்து சாஸ்த்ரார்த்த சந்த்ரிகை மூலமாக வெளியிட்டு ஸ்ரீஸ்வாமி திருவடிவாரத்தில் ஸமர்ப்பித்துக்கொண்டேன். கடாக்ஷித்தருளித் திருவுள்ளம் பூரித்து அடியேனுடைய அந்தேவாஸிகளையும் உறவினர்களையும் ஆச்ரமத்திற்கு வரவழைத்துத் தம்முடைய பரமானந்த ஸந்தோஷத்தைப் பலர் முன்னிலையில் ப்ரகாசப்படுத்திக்கொண்டது அந்த ஸ்வாமி யொருவர்க்கே ஏற்ற திருக்குணமாகும். விஷயங்கள் ப்ராமாணிகமாகக் கிடைத்துவிட்டனவென்று சாந்தியடையுமியல்பு எல்லார்க்கு மெளிதாகக் கிடைத்துவிடுமோ? யுத்தங்களில் ஜய பராஜயங்களைத் தெரிந்துகொள்ள எளிதான வழியுண்டு; ஒருதலை முதுகுகாட்டியோடுவதோ தலைசாய்ந்து வீழ்ந்து முடிவதோ நேர்ந்துவிடுவதால், வெற்றிபெற்றவரின்னார், தோல்வியடைந்தவரின்னார் என்று எளிதாகத்தெரிந்துகொள்ள முடிகிறது. பத்ரிகைகளில் எழுத்துமூலமாக நடைபெறும் விவாதங்களில், ப்ராமாணிகமான வாதம் எவரிடத்துள்ளது, அப்ராமாணிகமாக வாதிப்பவர் எவர்? என்பதைச் சில ஸூக்ஷ்மதர்சிகள் மாத்திரம் தெரிந்துகொள்ள முடியுமேயல்லது எல்லாரும் தெரிந்துகொள்ள இயலாது. அஸம்பத்த ப்ரலாபங்கள் தொடர்ச்சியாக வளர்கின்றன.

சென்றவாண்டு மலரிலிருந்து தோன்றிய விவாதங்களில் ப்ரஸக்தாநுப்ரஸக்தமாகப் பலபல சர்ச்சைகள் தோன்றிவிட்டாலும் மூலமான இரண்டு விஷயங்களையே எடுத்துக் கொள்வோமிங்கு. அந்த ஜயந்தி மலரில் உ. வே. வித்வான் தில்லையம்பூர் வேங்கடாசார்ய ஸ்வாமி யென்பவர் ஆசார்ய குணசர்சமென்றொரு வியாஸம் உபகரித்திருந்தார். அதில்— "ஆதிவண்சடகோப ஸ்வாமியின் விஷயங்களைக் கேட்டு ஸந்தோஷமடைந்த மணவாளமாமுனிகளும் இந்த ஸ்வாமியிடமே துரீயாச்ரமஸ்வீகாரம் செய்துகொண்டாரென்று பின்பழகிய பெருமாள் ஜீயரென்கிற ஸ்வாமியால் செய்யப்பட்ட பன்னீராயிரப்படி குருபரம்பரையில் ஸாதிக்கப்பட்டுள்ளது" என்று எழுதப்பட்டிருக்கிறது. இதில் நம்முடைய விமர்சம்-முதல் தனிமலரில் ந்ருஸிம்ஹப்ரியா ஸமீக்ஷையில் (பக்கம் 4, 5ல்) வெளிவந்திருக்கின்றது. மணவாளமாமுனிகள் ஆதிவண்சடகோபஸ்வாமி பக்கலிலே ஆச்ரமஸ்வீகாரம் பெற்றாரென்பதில் நாம் சிறிதும் ஆக்ஷேபம் வெளியிட்டிலோம். அதை உகந்து ஏற்றுக்கொண்டே எழுதியிருக்கிறோம். பின்னை இதிலுள்ள அஸம்பத்தமென்னவென்றால், மணவாளமாமுனிகளின் செய்தியைப் பின்பழகிய பெருமாள் ஜீயர் எழுதிவைத்தாரென்பது மிகவும் அஸங்கதமானது. அந்த ஜீயர் நம்பிள்ளையினுடைய சிஷ்யர். அவர் திருநாட்டுக்கெழுந்தருளினபின் நெடுநாள்

கழித்து மணவாளமாமுனிகளும் ஆதிவண்சடகோபஸ்வாமியும் அவதரித்தவர்கள். இவர்களது நிகழ்ச்சியை இவர்களுக்கு ஒரு நூற்றாண்டுக்கு முன்னே மறைந்தவர் எழுதிவைத்தாரென்றால் இப்படியெழுதுகிறவருடைய மூளையை யார் மெச்சுவது? 'கடா கன்று ஈன்றது' என்று ஒருவர் எழுதியனுப்பினாலும் அதை அப்படியே அச்சிடுவிப்பதா ஒரு பத்ராதிபருடைய பணி. இவ்வளவு மோசமான விஷயங்கள் பெரிய இடத்திலிருந்து வெளியாகிறவொரு பத்ரிகையில் இடம் பெற்றால் ஹாஹாகாரம் ஏன் தோன்றாது? ந்ருஸிம்ஹப்ரியா பத்ராதிபர் இவ்வொரு விஷயத்திற்காவது ஆர்ஜவத்தோடு விடையிறுக்கட்டுமே.' அப்படியெழுதினது பிசகென்று இசைந்தால் 'இது அஜ்ஞானத்தால் நேர்ந்த பிசகுதான்' என்று எழுதட்டும். 'பிசகன்று' என்று நிரூபிக்க விஷயமிருந்தால் அதையாவது வெளியிடட்டும். இரண்டுமின்றிக்கே சில அச்வ சகட ஸஞ்சாலகர்களைக்கொண்டு அவர்களது பாஷையில் வையச்செய்வதனால் என்னாகும் ? இதுவா பத்ராதிப லக்ஷணம்.

இரண்டாவது விஷயமாக * பூயிஷ்டாம் தே நமஉக்திம் * என்ற விடத்தை யெடுத்துக் கொள்வோம். இதில் நம்பிள்ளை திருவுள்ளமின்னதென்பது ப்ரஸித்தமாய்விட்டது. அதன் மேல் இன்னமும் அம்பு தொடுக்கப்பட்டு வருகிறது. இதனால் என்ன முடிந்ததாகிறதென்னில்; இப்போதைய மடம் ஈட்டை தூஷிக்க ருசியுடையதேயொழிய பூஷிக்க ருசியுடையதன்று என்பதே முடிந்தது. இப்படிப்பட்ட மடத்தில் ஈடு காலக்ஷேபம் நடப்பதாக ப்ரசாரம் செய்வதும், ஈடு தேசிக ஸம்ப்ரதாயத்திற்கே பொருந்தியதென்று பறை சாற்றுவதும் பாமரப்ரதாரணமென்றுதானே முடிந்தது. அதீத விவாதங்களில் எதிர்த்தலையிலுள்ள விபர்யயம் ஸ்தாலீபுலாகநீத்யா ப்ரதர்சிதமாயிற்று. இனி, தற்காலமலரைப்பற்றிச் சிறிது ஆராய்வோம்.

இதில் முதல் வியாஸம் 'தேசிக காவ்யங்களின் ஸர்வரஞ்ஜகத்வம்' என்பது. இதையெழுதினவர் மஹாப்ராஜ்ஞரென்பது நிர்விவாதம். ஆனைக்கும் அடிசருக்குமென்பது இங்குக் காண்கிறது. தேசிகனுடைய ஹம்ஸஸந்தேச காவ்யமும் காளிதாஸருடைய மேக ஸந்தேசமும் ஸமரஸ நிலையிலிருப்பதாக வைத்து நிரூபணம் செய்து வருகையில் (இரண்டாவது பக்கத்திலேயே) எழுதப்படுகிறது ; "மதுரையில் திருமாலிருஞ்சோலை மலையில் உள்ள அழகரை ஸுந்தரனெனும் பெயரையுடைய விஷ்ணு, ஸுந்தரபாஹ்வஸ்ய விஷ்ணோ: என்று ஸுந்தரபதத்தை விளிச் சொல்லாகவுரைத்துள்ளார். மதுரையில் வெறும் சுந்தரரென்றால் ஸுந்தரேச்வரரைத்தான் கொள்வர். அங்கே நூபுரகங்கையை வர்ணிக்கையில் 'அழகர் திருவடிச் சிலம்புகளிலிருந்து வரும் கங்கையாயினும் 'பகவான் பசுபதி சிரஸ் ஸ்பர்சம்' என்னும் சுத்தியேற்றம் சூந்யமென்று பாடுகிறார். * வாயோதிவ்யம் வஸுமதி பரிஸ்ரவஸ்ஸுமநஸ்யம் விஹாதி என்று பாடியதற்கு இப்படித்தான் பொருளென்று பரகால ஸ்வாமியின் ரஸாஸ்வாதினி உரையணித்தது போற்றத்தக்கது.''—என்று.

இதை ப்ராமாணிகர்களான தேசிகபக்தர்கள் யாவரும் பரிசீலிக்கவேணும். ஹம்ஸஸந்தேசத்தில் (1—49) * நித்யாவாஸம் வ்ருஷகிரிதடம் ஸுந்தரபாஹ்வஸ்ய விஷ்ணோ: என்று தொடங்கியுள்ள ச்லோகமுள்ளது. தூதுவிடப்படுகிற ஹம்ஸத்தை நோக்கித் திருமாலிருஞ்சோலையழகரை வழியிடையில் ஸேவிக்குமாறு கூறப்படுகிறது இதில். சிலம்பாறு என்கிற நூபுரகங்கை அங்கு பெருகுவது ப்ரஸித்தம். அது கங்கையிற் புனிதமானதென்று கொண்டாடப்படுகிறது. கங்கைக்கு பசுபதி ஜடாஸ்பர்சமாகிற ஒரு குறையுண்டு; நூபுர கங்

கைக்கு அக்குறைதானும் கிடையாதென்று புகழ்ச்சியே இங்குள்ளது. பண்டிதர்கள் சுலோகத்தை நன்கு சிந்தையில் சிந்தனை செய்தால் இப்பொருள் தவிர வேறுவகையான பொருள் இங்குத் தோன்றுவதற்கு ப்ரஸக்தியே கிடையாதென்று திண்ணமாக எண்ணுவர்கள்.

இனி, ஜயந்தி மலரில் வெளியாகியுள்ள அர்த்தம் ஆராயத்தக்கது. இந்த நூபுர கங்கையானது எம்பெருமானுடைய திருவடியினின்று பெருகுகின்ற கங்கையேயாயினும் பரமசிவனுடைய சிரஸ் ஸம்பந்தம் பெறுதபடியாலே சுத்தியேற்றம் சூன்யமாகப் பெற்றதென்று ஒரு பெரிய குறையை யேற்றி தேசிகன் இந்த ச்லோகம் பணித்திருப்பதாக எழுதப்பட்டுள்ளது. மேலே நாம் உதாஹரித்துக் காட்டியுள்ள வாக்கியங்களின் அஸாங்கத்யத்தை முன்னம் நிரூபித்துவிட்டு அர்த்தத்தின் அஸாதுத்வத்தைப் பிறகு நிரூபிக்கிறோம்.

"மதுரையில் திருமாலிருஞ்சோலையிலுள்ள அழகரை" என்று ஆரம்பமுள்ளது. இங்கு மதுரையின் ப்ரஸ்தாவம் அதிதராம் அநாவச்யகம். மூலத்திலும் மதுரையின் பேச்சு இல்லை. திருமாலிருஞ்சோலை மதுரை ஸமீபத்திலுள்ளதென்று காட்டுவதற்காக எழுதினதென்னில், இது வீண்பேச்சு. மதுரை எவ்வூரினருகே யுள்ளதென்பதையு மெழுதவேண்டும். வடமதுரையா? தென்மதுரையா என்றும் விவரிக்கவேண்டும். இது நிற்க. "திருமாலிருஞ்சோலையிலுள்ள அழகரை" என்று எழுதிவிட்டு உடனே "ஸுந்தரனெனும் பெயரையுடைய விஷ்ணு" என்று எழுதியிருக்கிறது. இவ்வெழுவாய்க்கு எங்கும் அந்வயமில்லை. அநந்விதமாக நிற்கிறது. அச்சுப்பிழையிருக்கலாம். சில சொற்களோ எழுத்துக்களோ விடுபட்டிருக்கலாம். அதுவும் நிற்க. "ஸுந்தராக்யஸ்ய விஷ்ணோ: என்று ஸுந்தர பதத்தை விளிச்சொல்லாக வுரைத்துள்ளார்" என்பது அடுத்த வாக்யம். தமிழில் விளிச்சொல் என்பது எட்டாம் வேற்றுமை—ஸம்போதநாந்தமான சொல். இங்கு ஸம்புத்திக்கு அணுமாத்ரமும் ப்ரஸக்தியில்லை. ஹம்ஸத்தை விளித்துச் சொல்லப்படுகிறதேயொழிய அழகரை விளித்துச் சொல்லப்படவில்லை. விசேஷணச்சொல் என்று எழுத நினைத்து விளிச்சொல் என்று ப்ராமாதிகமாக எழுதப்பட்டிருக்கலாம். இதுவும் நிற்க. "மதுரையில் வெறும் சுந்தரரென்றால் சுந்தரேச்வரரைத்தான் கொள்வர்" என்பது அடுத்த வாக்யம். இந்த வாக்யம் ஸர்வாத்மநா இங்கு அப்ரஸக்தமும் அருவருக்கத் தக்கதுமாயுள்ளது. மூலத்திலில்லாததும் கவியின் நினைவிலுமில்லாததுமான மதுரையை வீணாக இழுத்துப் போட்டுக் கொண்டு ஸுந்தரேச்வரரைக் கழிப்பதாகப் பேசுவது எதற்காக? ஸுந்தரபாஹு ஸ்தவத்தில் ஆழ்வான் *தம்வநெலஸுஜராவதூழ* என்று அருளிச்செய்திருப்பதால் அதை அடியொற்றி இங்கு ஸுந்தராக்யஸ்ய என்று கூறியிருப்பதாக அழகான வியாக்கியானம் செய்துள்ளார்கள். நூபுர கங்கை பெருகினது உலகளந்த ஸமயத்திலாதலால் அதைத் தெரிவிப்பதற்காக விஷ்ணோ: என்றது *த்ரீணி பதா விசக்ரமே விஷ்ணு:* என்ற ச்ருதியில் நோக்கு. ஆகவே மதுரையிலுள்ள ஸுந்தரேச்வரரை விலக்குதற்காக இங்கு ஸுந்தராக்யஸ்ய விஷ்ணோ: என்றதாக எழுதியிருப்பது உசிதமன்று. அநாவச்யகமாக ஸுந்தரேச்வரரைக் கொண்டு நுழைப்பதற்காகவே அநாவச்யகமாக "மதுரையில்" என்று வாக்யாரம்பம் செய்ததாகத் தேறிற்று.

இனி அர்த்தத்தின் அஸாதுத்வத்தை உபபாதிப்போம். எம்பெருமானுடைய ஸ்ரீபாத தீர்த்தமான கங்கைக்கு பசுபதியின் சிரஸ்ஸம்பந்தத்தினால் சுத்தியேற்பட்டதாகவும் அது தனக்கு அஃது ஓர் ஏற்றமாகவும் காட்டி அப்படிப்பட்ட ஏற்றம் நூபுரகங்கைக்கு இல்லை

யென்று குறை கூறப்படுகிறதிங்கு—என்று பொருள் விவரிப்பது ஸ்ரீவைஷ்ணவ ப்ருந்தத்தில் ஒருவராலும் ஏற்கத்தக்கதாகாது. தேசிகனுடைய திவ்யஸூக்திக்கு இது நேர் விபரீதமுமாகும். தேஹளீச ஸ்துதியில் 12, 13 ஆம் ச்லோகங்களை யநுஸந்தித்தால் இப்பொருள் அஸங்கதமென்று அறுதியிடலாகும். * ஸத்க்ருத்ய தவவக்ஷம் அத்ருஷ்டாநநகம் வாஷோ த்கம் அபிஸரா வஹந்தம் பிவக்யா* என்றும் *வாக்ஸரோஜ த்வொக்ஜாகிநீ விமுதி தா கேஸ ஊயாரா............வந்த்யாஸ்பஹமவ வஸ்ஸம்பாஸ நமௌஷி காயா* என்றுமுள்ள ஸ்ரீஸூக்திகள் காண்க. வரதராஜ பஞ்சாசத்திலும் *விக்ஷெந யஸ்ய வாஷொக்கெந விப்ரதெந பிவா ஹவஷி* என்று சமத்காரமாகவும் அருளிச்செய்தார். இவற்றுக்கெல்லாம் சிகரமாக் ஸ்தோத்ரபாஷ்யத்தில் *கஸ்யவாஷொக்கெந ஸம்பிவ: ஸ்வபிரோயுதெந என்ற விடத்து அபார்த்த நிரஸந பூர்வகமாகவும் யதார்த்தமான பொருள் நிலைநாட்டப்பட்டிருக்கிறது. அங்கு முடிவான ஸ்ரீஸூக்தி "சுதணவ * ஹரஸ்ய ஹாருஸம்ஸஸ்ராக்ஷவித்ருஸ கேவாம தெதந் தாவி ஹரஸ்யஸஙிப்ருக்ஷகவாமதெதி பெ ஐவஷ்ழ" என்றுள்ளது. அதற்கு முந்தின வாக்யங்களும் கவனிக்கத்தக்கன. ஸ்வாமி இப்படி ச்ரமப்பட்டுக் கண்டித்த வொரு அபார்த்தத்தை ஸ்வாமியின் ஸ்ரீஸூக்திக்கே அர்த்தமாக எழுதுவது அபசாரமுமாகுமன்றோ.

பரகாலஸ்வாமியின் ஹம்ஸஸந்தேச வியாக்கியானத்தில் இப்படித்தான் அர்த்தம் செய்யப்பட்டிருப்பதாகவும் அது போற்றத்தக்கதாகவும் எழுதப்படுகிறது. தெலுங்கு லிபியிலுள்ள அந்த வியாக்கியானம் நம்மிடமில்லை. அதனுடைய ஸாரஸங்க்ரஹமென்று திருக்குடந்தையில் க்ரந்த லிபியில் அச்சிடப்பட்ட வியாக்கியானமுள்ளது. அதில் இப்படிப்பட்ட அபார்த்தம் காணப்படவில்லை. விரிவானதில் இருக்கிறதென்னில், கீழே நாம் விரிவாகக் காட்டின நிரூபணங்களினால் அதுவும் தள்ளுண்டதேயாம். விபாதி என்கிற க்ரியாபதத்திற்கு நேர்விருத்தமன்றோ அப்பொருள். சிறப்புச் சொல்லியுகப்பதாக ஸுஸ்பஷ்டமாய்த் தெரியுமிடத்தில் இழிவு கூறி அழுவதாகப் பொருள் பணிப்பது ரஸிக ச்ரேஷ்டரான ஒரு மஹாபண்டிதருடைய மனத்தில் எங்ஙனம் புகுந்ததென்றறிகின்றிலோம். பசுபதி சிரஸ்ஸ்பர்ச சூந்யம் என்று காட்டப்பட்டிருக்கிற பாடமும் புதிதாயிருக்கின்றது. 'ஜடாஸ்பர்ச சூந்யம்' என்கிற பாடமே எங்கும் காண்கிறது. 'கங்கைக்கு சடைச்சாறு என்று சொல்லிப்போருவதொரு குறையுண்டு; அக்குறையுமில்லாததுகாண் நூபுரகங்கை' என்று ஸ்வாமிக்கு விவக்ஷிதமாகையாலே இதற்குச்சேர 'ஜடாஸ்பர்ச சூந்யம் விபாதி' என்றபாடமே ரஸவத்தரம். இப்பாட விஷயத்தில் விவாதம் வளரவேண்டா.

இந்த ச்லோகத்திற்கும் மேகஸந்தேச ச்லோகத்திற்கும் ஒரு ஸாமரஸ்யம் நிரூபிக்க வேண்டிய அவசியமே கிடையாது. அவசியமுண்டென்று நினைக்கில் அதில் * பாஹெத்ரா த்ரா நகூலீதஹரஸபிரஹஷிகா யௌதஹக்ஷ்ரா* என்ற ச்லோகத்திற்கும் இந்த ச்லோகத்திற்கும் ஒரு முடிச்சுபோட முயலலாம். அதைவிட்டு இப்படி ஏலாத பொருளை ஏறிட்டுரைப்பது ஸமஞ்ஜஸமன்று.

இவ்விஷயத்தில் முடிவில் ஒரு விண்ணப்பம். இப்போது அபார்த்தமென்று கழிக்கப்பட்ட பொருளை யெழுதியவர் அடியேனுக்குப் பரமாப்தரும் மஹாப்ரதிபுத்தருமான ஸ்ரீமத் ஏ. வி. கோபாலாசார்யஸ்வாமி. அவர் இப்படி யெழுதியிருக்கத்தகாதென்பதை அடியேன் ஸவிநயம் விஜ்ஞாபிக்கிறேன். தாம் எழுதினது உபபந்நதரமேயென்று அந்த ஸ்வாமி திருவுள்ளம் பற்றினால் அவர் தாமே உபபத்திகளை விவரித்து எழுதட்டும். வேறு சிலர் இதில் தலையிட்டு நிந்தைகளைப் பொழியவேண்டா. ஸமீபகாலத்தில் அந்த ஸ்வாமியெழுதின ஸாம

ரஸ்யாவகாஹந வியாஸத்திலெடுத்த அதிகரணஸாராவளி ச்லோகமொன்றில் (உதிவடிதை) என்பதுதான் சுத்தபாடமென்று தெரிவித்திருந்தேன். அதைக் கடாக்ஷித்தருளின அந்த ஸ்வாமி (இஹ) அச்சுப்பிழையாக விழுந்துவிட்டதென்று மூன்று திருமுகங்கள் ஸாதித்திருக்கிறார். ப்ராமாணிகர்களின் போக்கு இப்படியிருக்க, இம்மலரில் நாரணமங்கலம் சிரோமணியென்பாரொருவர் பெயரையிட்டு "இஹ பாடம் இதி பாடம் இரண்டுமுண்டு; அவரவர்களுக்கு எதில் ருசியோ அதை பரிக்ரஹித்துக்கொள்ளலாம்" என்று எழுதப்படுகிறது. அன்றியும் அசூடான கேள்விகள் கேட்கிறது- இவ்விஷயத்தில் எழுதவேண்டியவர் ஸ்ரீமத் வ. வி. கோபாலாசார்யஸ்வாமியே தவிர (வ்யாஹ்ருதா:) என்ன நின்ற வ்யக்திகளுக்கு இங்கு என்ன ப்ரவேசம்? தேசிக திவ்யஸூக்திகளை இவர்கள் பரம்பராயாவன்றிக்கே இடையிலே இழுத்துப்போட்டுக்கொண்டு கற்கத் தொடங்கினபடியாலே தப்புப் பாடங்களே இவர்களுக்கு மலிந்திருக்கின்றன. இம்மலரிலிருந்தும் இவர்கள் கொண்ட சில தப்புப்பாடங்களையெடுத்துக் காட்டி உலகுக்கு மஹோபகாரம் செய்கிறோம்.

"ஸ்ரீதேசிகனும் வேதாந்தாசார்யகமும்" என்கிற வியாஸத்தில் "வீண் பெரிய விரிதிரைநீர் வையத்துள்ளே வேதாந்தவாரிய னென்று இயம்பநின்றோம்" என்று தேசிகப்பிரபந்தப்பாட்டு காட்டப்பட்டிருக்கிறது. எழுதினவர் அத்யாபகர். (வீண்பெரிய) என்றால் என்ன பொருள் என்று ஆராய மாட்டிற்றிலர். மூலம் சந்தை சொன்னதும் திருவை சொன்னதும் சொல்லிவைத்ததுமெல்லாம் தப்புப்பாடமேயாயிற்று. (வேண்பெரிய) என்பதே உள்ளபாடம். 'பெரிதும் வேண்டப்படுகிற' என்று பொருள். வீண் பெரிய முயற்சிகள் ஏதுக்கிவர்க்கு? ப்ரஸங்காத் இவருடைய வியாஸத்தில் மற்றொன்றும் தெரிவிப்போம். பாடங்களைத் தவறாக உதாஹரிப்பதைத் தமக்கு நிலமல்லாத க்ரந்தங்களிலும் வைத்துக் கொண்டாரிவர். "பாஷ்யகாரர் இதுகொண்டு" இத்யாதியான ஆசார்யஹ்ருதய ஸ்ரீஸூக்தியை உதாஹரித்து அதற்கு மணவாளமாமுனிகளின் வியாக்கியான பங்க்தியாக எடுத்துக் காட்டுகிறார்—"ஸ்ரீபாஷ்யகாரர் இப் ப்ரபந்தத்தின் ஸூக்திகளைக்கொண்டு ஸூத்ரவாக்ய ஸந்திக்தார்த்தங்களை ஐககண்ட்யம் பண்ணியருளுவர் என்பதாக மாமுனிகள் விவரணமுள்ளது" என்று. இப்படிப்பட்ட அஸம்பத்தமான பங்க்தி விசதவாக்சிகாமணிகளின் திருவாக்கில் ஒருபோதும் வாராது. ஸந்திக்தார்த்தங்களை ஐககண்ட்யம் பண்ணுவதாக எழுதுகிறமுறை பண்டித கோஷ்டிகளில் நடையாடுமதன்று. ஸந்திக்தார்த்தங்களை நிர்ணயிப்பதென்றும், அர்த்தவிரோதம் தோன்றுமிடங்களில் ஐககண்ட்யம் பண்ணுவதென்றும் விவேகிகள் வ்யவஹரிப்பர்கள். "ஸந்திக்தங்களான அர்த்தங்களையெல்லாம் நிர்ணயித்து" என்று தெள்ளிதாகவுள்ள மணவாளமாமுனிகளின் பங்க்தியைத் தம்முடைய மதிக்கேற்பத் தவறாக உதாஹரித்துக் காட்டுகிறாரந்தோ.

மற்றொரு தமிழ்ப்பண்டிதர் "தமிழ்க்கடவுள்" என்றொரு வியாஸமெழுதி அதிலும் தேசிகப்ரபந்தப்பாசுரமொன்றை யெடுத்தாளுகிறார் *அந்தமிவ்சீரயிந்தைநகரமர்ந்தநாதனித்யாதி. இதில் *பந்துகழலம்மானையூசலேசல்* என்றதற்குப்பின் 'பரவு நவமணிமாலை' என்று அந்த பரம்பரைப்பாடத்தையே இவருமாதரிக்கிறார். குருமுகமாகக் கேளாமல் ஏடுபார்த்துக் கற்பதனாலான அனர்த்தமிது. ஓலைச்சுவடிகளில் (ா) (ர) இவ்விரண்டுக்கும் வாசி தெரியாமே எழுதப்படுவது வழக்கம். 'உனதடியே சரணமே' என்ற திருமங்கையாழ்வார் பாசுரத்தை (உனதடியே சாணமே) என்று தோழுந்தூரில் சிலர் ஸேவிக்கக் கேட்டதுண்டு. இத்தகைய விபர்யயங்கள் பல்லாயிரம். ப்ரக்ருதத்தில், * பந்துகழலம்மானையூசலேசற்பாவும் நவமணிமாலையிவையும் சொன்னேன்* என்றுதான் ஸ்வாமி ஸாதித்தது. (பாவும்) என்றது பந்து

முதலிய ஒவ்வொன்றிலுமந்வயிப்பது; பந்துப்பாவும் கழற்பாவும் அம்மானைப்பாவும் ஊசற் பாவும் ஏசற்பாவும் நவமணிமாலையும் சொன்னேன் என்பது பொருள். அந்த பிரபந்தங்கள் லுப்தமாய்விட்டாலும் அவற்றின்பெயர் பந்து கழல் அம்மானை.......என்றல்லவே. பந் [illegible]..என்றன்றோ. அதைத்தான் ஸ்வாமி அருளிச்செய்திருப்பது. இயல் [illegible]மலம்மானை யூசலேசற்பாவும்' என்றே நிறுத்தி ஸேவிக்கவேண்டும். [illegible]மிருந்து வெளிவரவேண்டுமென்பதற்காகவே எம் [illegible]வர்களையிட்டுத் தப்புப்பாடங்களை ப்ரசுரிக்கச் செய்கிறனென்பது தத்துவம். இவர்களுடைய தப்புப்பாடங்களை யெடுத்துக்காட்டித் திருத்துவார் இவர்களது கோஷ்டியில் ஒருவருளரோ? எடுத்துக்காட்டினாலும் அஸூயையினால் ஆக்ஷேபிப்பதற்கும், அப்படியுமிருக் கலாமிப்படியுமிருக்கலாம்' என்பதற்குப் பலருளர்.

நம்முடைய ஆப்தஸஹ்ருந்மணியான ஸ்ரீகார்யம் ஸ்வாமி தமது வியாஸத்தில் "ஸ்வாமியவதாரத்தினால் சூந்யமாஸமான புரட்டாசிமாஸம் உத்தமமான மாஸ மாயிற்று" என்றார். இது உத்தமமான வார்த்தை மிகவும் அழகாகவே சொல்லப் பட்டது. உடனே "அதெப்படியெனில்" என்று தொடங்கி யெழுதுகிறார்—கண்ணன் அவதரித்தது அர்த்தராத்ரியாயிருந்தும் * தேவகீ பூர்வஸந்த்யாயாம் ஆவிர்ப்பூதம் மஹாத்மநா* என்று விடியற்காலமாக வர்ணித்தார் என்று. இவரெடுத்துக்காட்டும் ப்ரமாணத்திற்கு அதுவா பொருள். அந்த ச்லோகத்தின் பூர்வார்த்தத்தில் அச்யுதபாநுநா என்று கண்ணன் ஸூர்யனாக ரூபிக்கப்பட்டதற்கிணங்க, ததுத்பத்தி பூமியான தேவகிப்பிராட்டி பூர்வ ஸந்த்யையாக ரூபிக்கப்பட்டாளத்தனை. பூர்வஸந்த்யா காலத்தில் கண்ணன் உதித்தா னென்றோ கண்ணன் அவதரித்தது பூர்வஸந்த்யாகாலமென்றோ மஹர்ஷி சொல்லாதிருக்க, அப்படிச்சொல்லியிருப்பதாகக் காட்டுவது எங்ஙனே சேரும்? சாடுக்தியாகச் சொன்னேங் காணும் என்பர். இது அசடுக்தியில் சேருமேயொழிய சாடுக்தியில் சேருமோ?

வேதாந்தவாவதூகர் பாத்ரபதம் என்றெழுதிய வியாஸம் உண்மையில் ப்ராமாணிக மானது. ஸ்ரீராமாயண வ்யாக்க்யாதாவான கோவிந்தராஜரை உள்ளபடி ஆச்சரியமாகப் புகழ்கிறார். சிறிதும் அதிசயோக்தியின்றிக்கே யதார்த்தமாகக் கொண்டாடுகிறார். "இன்ன படிப்பட்டதென்று வரையிட்டுச் சொல்லமுடியாத பஹுமுகமான ஜ்ஞானஸம்பத்துடை யவர் கோவிந்தராஜர். இவர் செய்த ராமாயண வியாக்கியானம் ரஸிகர்களின் பஹுமானத் தைப்பெற்று இதர வியாக்கியானங்களை வெகு தூரத்தில் விலக்கி வெற்றிகொண்டுள்ளது." என்று புகழ்ந்திருக்கிறார். தேசிக திவ்யஸூக்திகளைத்தழுவியே இக்கோவிந்தராஜர் வியாக்கி யானம் செய்தவர் என்று அழகாக நிரூபிக்கிறார். அதுவும் அத்புதமான நிரூபணமே மதுராந்தகத்தில் ஒரு ஸாத்விகர் இந்த வாவதூகரிடம் வந்து ஸ்ரீராமாயணம் அயோத்யா காண்டம் 113 ஆம் ஸர்க்கம் 18, 19 சுலோகங்களின் கோவிந்தராஜீயத்தைக் கையில் கொடுத்து வாசிக்கச் சொல்ல ஆனந்தமாக வாசித்தாராம்—வாசித்த பங்க்திகளாவன—
" [illegible]
[illegible]." என்பன. உடனே
([illegible]) என்பதையும் வாசித்தாராம். வாசித்துவிட்டு மருளமருள விழிப் பதும் கறுக்கச் சிவக்கப் பார்ப்பதுமாகி, உப்! ஊம்!! உம்!!! என்று பெருமூச்செறிந்து ஸரிதான், இதுவும் தேசிக திவ்யஸூக்தியைத் தழுவியே தான் ஸாதித்திருப்பது; *நமோ நமோ வாங்மநஸாதிபூமயே* என்றவிடத்து ஸ்தோத்ரபாஷ்யத்திலுள்ள நிஷ்கர்ஷத்தைத் தழு வியே இது ஸாதித்திருப்பதால் ஒரு குறையுமில்லை என்றாராம். (தொடரும்.)

# கடிதங்கள்.

(மத்ராஸ்) டி. நகர் 26, பாஜுல்லா ஸாஹிப் ரோட்,

ஸ்ரீமத் ராவ்ஸாஹிப் S. ராகவையங்கார் ஸ்வாமி,

28—10—52.

"ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

ஸ்ரீமத் ஸ்வாமி ஸன்னிதியில் அடியேன் அனந்தமான தெண்டன் ஸமர்ப்பித்துச்செய்யும் விண்ணப்பம், உபயகுசலம். தேவரீரிடமிருந்து வரும் ஸகல ஸஞ்சிகைகளையும் புத்தகங்களையும் வெகு குதூஹலத்தோடு எதிர்பார்த்திருப்பதும் பலரோடுகூடி வாசித்துக்களிப்பதுமாயிருந்துவருகிறேன். ஸமீபத்தில் கிடைத்த வைதிக மனோஹராவிலுள்ள விஷயங்கள் ஒவ்வொன்றும் திவ்யாம்ருதமென்னவேணும். வெகுகாலமாக மனோஹராவில் வெளிவந்துகொண்டிருந்த திவ்யப்ரபந்த ஸம்ஸ்க்ருதடீகை என்போல்வாருடைய அநுபவத்திற்கு வெகு இன்பமானது. அதில் பல விசேஷார்த்தங்கள் வெகு அழகாகவும் கம்பீரஸரணியிலும் மனோஹரமாயும் இருந்தன. அவைகளால் பத்ரிகைக்கே ஒரு ஏற்றம் என்று சொல்லும்படியிருந்தது. அந்த வியாக்கியானங்கள் பூர்த்தியாகாமல் நிறுத்தப்பட்டிருப்பதற்குக் காரணம் தெரியவில்லை. இதில் பலபேர்களுக்கு வருத்தமுண்டு.

சிலமாதங்களாக அஹோபிலமட வித்வான்களின் லேகனங்களும் அவற்றுக்கு ஸ்வாமியின் கண்டனங்களும் வெளிவந்துகொண்டிருப்பதால் இதில் ஆஸக்தியினால் அந்த வியாக்யானங்களெழுத அவகாசப்படவில்லையோ என்று ஒரு ஸந்தேஹம். மட வித்வான்களின் லேகனங்கள் ஸ்ரீராமன் 'கச்சாநுஜாநாமி' என்று விடை கொடுத்தனுப்புவதற்கு முந்திவிட்டருளின பாணங்கள்போல் ஸ்வாமியின் அத்புதவியாஸங்களினால் சிதறவடிக்கப்பட்டன. அவர்கள் மனஸ்பூர்த்தியாகத் தங்களுடைய பங்கத்தையுணர்ந்திருப்பார்கள். ருஜுஸ்வபாவமுள்ளவர்களாக இருந்தால் 'சத்ரோ: ப்ரக்யாதவீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை:' என்று ராவணன் கூறினபடி தங்கள் ஆப்தர்களிடமாவது ஸ்வாமியின் அத்புத லேகனங்களைப்பற்றிப் பரவசர்களாய்க் கொண்டாடியிருக்கவேண்டும். அப்படிக்கில்லாமல் வீண் ஆக்ரஹத்தினால் நமேயம் என்ற ரீதியில் கிடந்து அவர்கள் இன்னமும் சில அஸங்கதப்ரலாபங்களையே எழுதிக்கொண்டிருக்கிறார்கள். அவைகளும் ஸ்வாமியின் வியாஸங்களினால் உடனுக்குடனே அறுப்புண்டு வருகின்றன. லோகராவணன் பெருமாளாலறுக்கப்பட்ட தலைகளைக்கண்டு மருண்டதுபோல, அறுப்புண்ட தங்கள் லேகனங்களைப் பார்த்துப்பார்த்து மருண்டேயிருப்பர்கள். இந்த விவா

(இதன் தொடர்ச்சி ராப்பரில்)